# திராவிட மொழிகளும் திராவிட மொழி ஆய்வுகளும்

முனைவர் ச. மனோகரன்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# திராவிட மொழிகளும் திராவிட மொழி ஆய்வுகளும்

முனைவர் ச. மனோகரன்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை, மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை – 600 113

வ.அய். சுப்பிரமணியம் அறக்கட்டளைச் சொற்பொழிவு

(அறக்கட்டளை நிறுவியவர் : ச.வே.சுப்பிரமணியம், உலகத் தமிழ்க் கல்வி இயக்ககம், தமிழூர்)

வரிசை எண் : 2 நாள் 22.2.2013

---

## நூல் விவரக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூதலைப்பு | : | திராவிட மொழிகளும் திராவிட மொழி ஆய்வுகளும் |
| ஆசிரியர் | : | முனைவர் ச. மனோகரன்<br>ஆய்வறிஞர்<br>செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம் |
| பொதுப் பதிப்பாசிரியர் | : | முனைவர் பெ. செல்வக்குமார்<br>இணைப் பேராசிரியர்<br>தமிழ்மொழி மற்றும் மொழியியல் புலம்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>தரமணி, சென்னை 600 113 |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மை சாலை<br>மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை 600 113<br>தொலைபேசி எண் 044/22542992 |
| வெளியீட்டு எண் | : | 749 |
| மொழி | : | தமிழ் |
| ட திப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2012 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டி.என்.பி.எல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : | 10 புள்ளி |
| பக்க எண்ணிக்கை | : | viii + 200 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ. 90/– (ரூபாய் தொண்ணூறு மட்டும்) |
| அச்சகம் | : | இலட்சுமி ஏஜென்ஸீஸ்<br>23/11, பெருமாள் முதலி தெரு<br>இராயப்பேட்டை, சென்னை 600 014 |
| பாடம் | : | தமிழ்மொழி மற்றும் மொழியியல் |


---

*அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பன்று*

முனைவர் கோ. விசயராகவன் எம்.ஏ., எம்.ஃபில், பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை 600 113

## அணிந்துரை

ஒரே குடும்ப மொழிகளைப் பற்றிய ஆராய்ச்சி 19ஆம் நூற்றாண்டிற்கு முன்னரே மேற்கொள்ளப்பட்டதாக மொழி வரலாறு கூறுகிறது. ஆனால் இக்கருத்தை முழுமையாக ஏற்க முடியவில்லை. குமரிலப்பட்டரின் 'தந்திர வார்த்திகா' என்ற நூலில் பிழையான பாடத்தின் அடிப்படையில் கால்டுவெல். 'ஆந்திர திராவிட' என்ற சொல்லைத் தெலுங்கு, தமிழ் மொழிகளைக் குறிக்கும் நோக்கத்தில் குமரிலபட்டர் பயன் படுத்தியதாகச் சொல்கிறார் (R. Caldwell: A Comparative Grammar of the Dravidian Language. p.4). அச்சொல் 'திராவிட ஆந்திரா' அல்ல. மாறாகத் 'திராவிட ஆதி' (Dravida adi–) திராவிட முதலியன என்பதே அதன் பொருளாகும்.

19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கிழக்கிந்தியக் கம்பெனியைச் சேர்ந்த எல்லிஸ் என்பவர் தமது ஆய்வுக் குறிப்பில் 1816 ஆம் ஆண்டில் கேம்பல் (A.D. Campbell) என்பவரின் 'தெலுங்கு இலக்கணம்'(Telugu Grammar) என்ற நூலின் முன்னுரையில் தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு மொழிகளுக்கும் இடையேயுள்ள ஒற்றுமைகளைச் சுட்டிக் காட்டினார்.

கால்டுவெல் 1856 ஆம் ஆண்டில் "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" என்னும் பொருண்மையில் திராவிட மொழி ஒப்பியல் ஆய்வுத் துறைக்கு வலுவான தொரு நூலை வெளியிட்டு திராவிட மொழி ஆராய்ச்சிக்குப் பெருமை சேர்த்தார். கால்டுவெல்லின் நூல் வெளியாகி நூற்றாண்டுகளைக் கடந்தும் இவரது இந்நூல் திராவிட அடையாளங்களை மொழிக்கூறுகளின் மூலமாகத் தெளிவடையக் காரணமாக அமைகின்றது. இதற்குப் பின்னர் இந்திய மொழிகளின் அளவாய்வில் (Linquistic Survey of India) ஸ்டென்கனோவ் (Sten Konow) முண்டா மொழிகளையும், திராவிட மொழிகளையும் பற்றி எழுதிய கருத்துக்களும் இவ்வாராய்ச்சி வழிமுறைகளைச் சிறக்கச் செய்தன.

1946ல் யூல்ஸ் பிளாக் (Jules Block) 'திராவிட மொழிகளின் இலக்கண அமைப்பு' எனும் நூலை எழுதினார். எமனோ (M.B. Emeneau) அவர்கள் கோலாமி மொழி பற்றிய தமது நூலில் கோலாமி மொழிச் சொற்பட்டியல் ஒன்றைத் தந்து அதனுடன் பிற திராவிட மொழிச் சொற்களையும் ஒப்பிட்டுக் காட்டியுள்ளனர். இவ்வாறாக,

திராவிட மொழி ஆராய்ச்சி வளர்ச்சியில் அயல் நாட்டினரின் பங்களிப்பு மிகப் பெரிதாகத் தெரியவரினும் எல்.வி. இராமசுவாமி ஐயரைப் போன்றவர்கள் திராவிட மொழிக் கணக்கெடுப்பைப் பற்றியும் திராவிட மொழி உறவு அடையாளங்களைப் பற்றியும் ஆய்ந்துள்ளனர்.

'திராவிட மொழிகளும் திராவிட மொழி ஆய்வுகளும்' என்ற இந்நூல் இதுவரை திரும்பிப் பார்த்த வரலாற்றைத் தொடர்ந்து எடுத்துச் செல்லும் நிலையிலும் திராவிட மொழி ஆராய்ச்சியின் வளர்ச்சிப் போக்கிற்கு சிறப்பு சேர்க்கும் என்பதில் ஐயமில்லை. திராவிட மொழிகளைப் பற்றித் தெரிந்து கொள்வதற்கும், திராவிட மொழி ஆராய்ச்சிக்காக நோக்கீடு செய்வதற்கும் ஒரு பொற்களஞ்சியமாக இந்நூல் திகழும் என்பதை உறுதி செய்கிறேன். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் மூலமாக இந்நூல் வெளியாவதைப் பெருமையாகக் கருதுகிறேன். இவ் அரிய நூலை திராவிடமொழி ஆய்வுலகிற்குத் தந்த நூலாசிரியர் முனைவர் ச. மனோகரன் அவர்களை வாழ்த்துகிறேன்.

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்கள் தமிழ் மீதும், தமிழர் மீதும், தமிழ்நாட்டின் மீதும், தமிழ்ப் பண்பாட்டின் மீதும் கொண்டுள்ள அன்பும் கருணையும் அளப்பரியன. ஆதலால், இவற்றின் மேம்பாட்டுக்கெனப் பல திட்டங்களை மேற்கொண்டு வருகின்றார்கள். ஒல்லும் வகையெல்லாம் தமிழ் வளர்த்துவரும் மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவி அம்மா அவர்களுக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் நன்றிகளைப் பதிவு செய்கின்றேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையைக் காட்டிவரும் பள்ளிக்கல்வி, இளைஞர் நலம், விளையாட்டு, தமிழ் ஆட்சிமொழி, சட்டம், நீதிமன்றங்கள் மற்றும் சிறைத்துறை அமைச்சர் மாண்புமிகு என்.ஆர். சிவபதி அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி, அறநிலையங்கள் மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப. அவர்களுக்கும் என் இனிய நன்றிகளை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

இந்நூலைச் சிறப்பாக அச்சிட்டுத் தந்த இலட்சுமி ஏஜென்சிஸ் அச்சகத்தாருக்கும் என் பாராட்டுகள்.

இயக்குநர்

# ஆசிரியர் குறிப்பு

## பெயர்: முனைவர் ச. மனோகரன்

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 1974ஆம் ஆண்டு மொழியியலில் முதுகலைப் பட்டம்பெற்று, 1975ஆம் ஆண்டு மார்ச்சு திங்களில் மானிடவியல் அளவாய்வுத் துறையின் (மத்திய அரசு) தலைமை அலுவலகத்தில் (கல்கத்தா) மொழியியல் ஆய்வாளராக பணியில் சேர்ந்தார். பின்னர் அந்நிறுவனத்தின் பல வட்டார மையங்களில் (உதய்பூர், நாக்பூர், மைசூர்) பணியாற்றியுள்ளார். அந்நிறுவனத்தில் பணிபுரியும்பொழுது தமிழ்நாடு, கேரளம், ஆந்திரப் பிரதேசம், குஜராத், இராஜஸ்தான், மகாராஷ்டிரம், அந்தமான் நிக்கோபார் தீவுகள் போன்ற பல மாநிலங்களில் களஆய்வுகள் செய்து அறிக்கைகள் சமர்ப்பித்துள்ளார். அந்தமான் மொழியில் செய்த ஆய்வுக்காக கல்கத்தாப் பல்கலைக்கழகம் 1981ஆம் ஆண்டு முனைவர் பட்டம் வழங்கியது. அந்தமான் பழங்குடியினர் பேசும் மொழிகளை ஒரு தனிமொழிக் குடும்பம் என்று நிரூபித்துள்ளார். இந்தியாவிலுள்ள அனைத்து மாநிலங்களிலும் யூனியன் பிரதேசங்களிலும் வாழும் சமுதாயங்களின் தாய்மொழிகளைத் தொகுத்தளித்துள்ளார். இந்நூல் புதுதில்லியிலுள்ள ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தால் வெளியிடப் பட்டுள்ளது. மேலும் தமிழ்நாட்டில் நடத்தப்பெற்ற இனவரைவியல் அளவாய்வின் ஒருங்கிணைப்பாளராகவும் பதிப்பாசிரியராகவும் பணியாற்றியுள்ளார். இந்நூல் மூன்று பாகங்களாக வெளியிடப் பட்டுள்ளது. இதுவரை இவர் 20க்கும் மேற்பட்ட அகில இந்திய, பன்னாட்டு கருத்தரங்குகளில் கலந்துக்கொண்டுள்ளார். இதுவரை ஏறக்குறைய 40 கட்டுரைகள், 5 நூல்கள் வெளியிட்டுள்ளார். சுமார் 32 ஆண்டுகள் இந்திய மானிடவியல் அளவாய்வுத் துறையியில் பணியாற்றியபின் தற்பொழுது 7 ஆண்டுகளாகச் செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தில் அகராதியியல் துறையின் பொறுப்புத் தலைவராக பணியாற்றி வருகிறார்.

# பொருளடக்கம்

# முகவுரை

இந்தியத் துணைக்கண்டத்தில் பேசப்படும் மொழிகள் அனைத்தும் நான்கு மொழிக்குடும்பங்களைச் சேர்ந்த மொழிகள் ஆகும்: ஆஸ்ட்ரோ- ஆசியாடிக், இந்தோ-ஆரியன், திராவிடம், திபெத்தோ - பர்மன். இம்மொழிக் குடும்பங்களுள் திராவிட மொழிகள் எண்ணிக்கையில் குறைவாக இருந்தாலும், இந்திய மக்கள் தொகையில் இரண்டாவது இடம் வகிக்கின்றன. திபெத்தோ - பர்மன் மொழிகள் எண்ணிக்கையில் அதிகமாக இருந்தாலும் மக்கள் தொகை அடிப்படையில் நான்காம் இடம் வகிக்கின்றன. மேலும், இந்தியத் துணைக்கண்ட வரலாற்றில் திராவிட மொழிகள் பேசும் மக்கள் குடியேறிய காலம் மொகஞ்சோதாரோ - ஹரப்பன் நாகரிகங்களுக்கு முந்தைய காலமாகும். எனவே, துணைக்கண்ட வரலாற்றின் தொன்மை யிலும், கலாச்சாரம், பண்பாடு, நாகரிகம் போன்ற சமூகக் கூறுகளிலும் திராவிட மொழிகள் பேசும் மக்களின் பங்கு போற்றத்தக்கதாகும். இந்தியத் துணைக்கண்டத்தில் காலத்தால் தொன்மையான, மிக முக்கியமாகப் பேசப்படும் மொழிக் குடும்பமான திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளின் ஆய்வுகளைப் பற்றியும் கள ஆய்வுகளின் அடிப்படையில் கண்டறியப்பட்டுள்ள திராவிட மொழிகளைப் பற்றியும் இந்நூலில் எடுத்துக்காட்டுகளுடன் விரிவாக எடுத்துரைக்கப் பட்டுள்ளது.

இந்தியாவில் வாழும் அனைத்துவகையான சாதியினர் களையும், பழங்குடிமக்களையும் அளவாய்வு (Survey) செய்து அறிந்துகொள்ளும் வண்ணமாக இந்திய மானிடவியல் அளவாய்வுத் துறை நிறுவனம் (Anthropological Survey of India) "இந்திய மக்கள் (People of India)" எனும் தலைப்பில் ஒரு திட்டத்தை 1985ஆம் ஆண்டு செயல்படுத்தத் துவங்கியது. இத்திட்டத்தில் கள ஆய்வுகள் மூலம் அனைத்துச் சமுதாயங்களைப் பற்றிய தரவுகள் சேகரிக்கப்பட்டன. அவ்வகைத் தரவுகளில் ஒவ்வொரு சமுதாயத்தைச் சேர்ந்த மக்கள் பேசும் மொழிகள் பற்றிய தரவுகளும் ஒன்றாகும். இவ்வாறு கள ஆய்வுகள் மூலம் சேகரிக்கப்பட்ட மொழித் தரவுகளைத் தொகுத்து அவற்றை ஆய்வு செய்யும் வாய்ப்பு

எனக்குக் கிடைத்தது. அதன் மூலமாக இந்தியாவில் அனைத்து மாநிலங்களிலும், யூனியன் பிரதேசங்களிலும் வாழும் அனைத்துத் தரப்பட்ட சமுதாயங்களைச் சேர்ந்த மக்கள் பேசும் மொழிகளைத் தொகுத்து அவற்றில் இதுவரை நடந்துள்ள ஆய்வுகளின் அடிப்படையிலும், மக்கள் தொகைக் கணக்கெடுப்புகளில் உள்ள மொழிகளின் பதிவுகள் அடிப்படையிலும் உள்ள தரவுகளையும் சேர்த்து 1993ஆம் ஆண்டு ஒரு நூலாக வெளியிடப்பட்டது. இந்திய மானிடவியல் அளவாய்வுத் துறை நிறுவனத்தின் தலைமை இயக்குநர் (Director General) முனைவர் கே.எஸ். சிங் (K.S. Singh) அவர்களோடு நான் இணைந்து எழுதிய இந்நூல் ஆக்ஸ்போர்டு யுனிவர்சிட்டி அச்சகத்தால் (Oxford University Press, New Delhi) 1993ஆம் ஆண்டு வெளியிடப்பெற்றது.

பின்பு, மக்கள்தொகைக் கணக்கெடுப்புகளில் பதிவு செய்யபட்டுள்ள மொழித்தரவுகளின் அடிப்படையில் இந்தியப் பழங்குடியினர் பேசும் மொழிகளில் காணப்படும் மொழி இழப்புகள் (1999) பற்றிய கட்டுரை, திராவிடர்களும் திராவிட மொழிகளும் (2001) எனும் கட்டுரை, இந்திய மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் இந்திய மொழிகள் (2001) எனும் கட்டுரை ஆகிய மூன்று கட்டுரைகள் ஆய்வு இதழ்களில் வெளி வந்துள்ளன. இவ்வாறாக மொழியியல் ஆய்வுகளில் நான் பெற்றுள்ள அறிவு அனுபவத்தை மூலதனமாக வைத்து இந் நூலை எழுதியுள்ளேன்.

பேராசிரியர் வ.ஐ. சுப்பிரமணியம் ஒரு சிறந்த மொழியியல் பேராசிரியர் மட்டுமன்று திராவிட மொழியியல் ஆய்வுகளுக்குத் தனி இயக்கங்களை (Dravidian Linguistics Association, International School of Dravidian Linguistics) உருவாக்கி அவை மூலம் மொழியியல் ஆய்வுகளை வளர்த்தவர். மேலும் திராவிடப் பல்கலைக்கழகம் (Dravidian University) உருவாவதிலும் அவர்களுடைய பங்கு மிகவும் இன்றியமையாத ஒன்றாகும். இத்தகைய பெருமைகளுடைய ஒரு பேராசிரியரின் பெயரில் நிறுவப்பட்டுள்ள அறக்கட்டளைச் சொற்பொழிவு நிகழ்த்தும் வாய்ப்புப் பெற்றமையில் மகிழ்ச்சியும் பெருமிதமும் கொள்கின்றேன். இத்தகைய வாய்ப்பை நல்கிய தமிழ் வளர்ச்சித்துறைச் செயலர் முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப., அவர்களுக்கும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன மேனாள் இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு) முனைவர் கா.மு. சேகர் அவர்களுக்கும், இயக்குநர் முனைவர் கோ. விசயராகவன் அவர்களுக்கும், இணைப் பேராசிரியரும்

அறக்கட்டளைப் பொறுப்பாளருமான முனைவர் பெ. செல்வக்குமார் அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவை நூல் வடிவில் எழுதுவதற்கு உரிய சூழ்நிலைகளை ஏற்படுத்திக் கொடுத்த செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவன இயக்குநர் (கூடுதல் பொறுப்பு) பேராசிரியர் ஆர். ஞானமூர்த்தி அவர்களுக்கும், பதிவாளர் முனைவர் மு. முத்துவேலு அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். இந்த நூலைக் கணினிமயமாக்குவதில் உதவியாக இருந்த திருமதி சீ. நாகூர் அம்மாளுக்கும், திரு. சோ. சரவணனுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன். இந்நூலின் கணினிப்பிரதியை மெய்ப்புத்திருத்தம் செய்து உதவிய முனைவர் ஆ. தசரதன் அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

# முன்னுரை

இந்தியத் துணைக்கண்டத்தில் (Indian subcontinent) பல நூறு மொழிகள் பேசப்படுவது இத்துணைக்கண்டத்திற்குப் பெருமை சேர்ப்பதாக இருந்தாலும், இங்குப் பேசப்படும் மொழிகள் அனைத்தும் பல மொழிக் குடும்பங்களைச் (language family) சேர்ந்தவை என்பது மேலும் கூடுதல் பெருமை ஆகும். இந்தியத் துணைக்கண்டத்தில் பேசப்படும் மொழிகளுள் தமிழும் (Tamil) சமஸ்கிருதமும் (Sanskrit) தொன்மைவாய்ந்த செம்மொழிகளாகும் (Classical Languages). இம்மொழிகளின் இலக்கண (grammatical), இலக்கியப் (literary) பாரம்பரியங்கள் (traditions) தனித்தன்மை வாய்ந்தவை மட்டுமன்றிக் காலத்தால் மிகவும் பழமையானவை. இம்மொழிகளில் சமஸ்கிருதம் இந்தோ - ஆரிய துணைமொழிக்குடும்பத்தைச் சேர்ந்த (Indo - Aryan subfamily) இந்தோ - ஐரோப்பிய (Indo - European) மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழியாகும். இந்த மொழி தொன்மை வாய்ந்த செம்மொழிகளாகக் கருதப்படும் கிரேக்கம் (Greek), இலத்தீன் (Latin) ஆகிய மொழிகளுடன் தொடர்புடையதாகும். தமிழ்மொழி திராவிட மொழிக் குடும்பத்தின் தொன்மை வாய்ந்த செம்மொழி மட்டுமல்லாது இதுவே இலக்கண, இலக்கியப் பாரம்பரியங்களில் திராவிட மொழிக் குடும்பத்தைச் (Dravidian Language Family) சேர்ந்த மொழிகளுக் கெல்லாம் மூத்த மொழியாகும். திராவிட மொழிகளின் ஒப்பாய்வு களுக்குரிய (comparative studies) பல தரவுகள் (data) தமிழ் மொழியின் சங்ககால, சங்கம் மருவிய கால இலக்கண, இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன. திராவிட மொழிகளில் கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகள் பிற்காலத்தில் இலக்கண, இலக்கியப் பாரம்பரியங்களை உருவாக்கிக் கொண்டாலும் அவற்றின் இலக்கண, இலக்கியப் பாரம்பரியங்கள் பெரும் பாலும் சமஸ்கிருத மொழியைச் சார்ந்தனவாக உள்ளன. இலக்கண, இலக்கியப் பாரம்பரியங்களைக் கொண்ட இந் நான்கு மொழிகளும் தங்கள் மொழிகளின் இலக்கண, இலக்கிய அறிவுகளைக் காலப்போக்கில் வளர்த்துக் கொண்டன. ஆனால் ஒரு மொழிக்கும் பிற மொழிகளுக்கும் உரிய மொழி சார் உறவுகள் பற்றிய சிந்தனைகளையும், அறிவியல் உண்மைகளையும் கி. பி. 16ஆம் நூற்றாண்டு வரை எவரும் தூண்டவில்லை அல்லது அப்படியொரு ஆய்வுகளில் நாட்டம் காட்டவில்லை என்றே கூற

வேண்டும். ஆனால் இந்தியத் துணைக்கண்டத்தில் பல மொழிகள் பேசப்படுவதை மட்டும் அறிந்திருந்தனர்.

ஐரோப்பியர்களின் வருகைக்குப் பின்னர் இந்த நிலை மாறத்தொடங்கியது. காலனிநாடுகளில் ஆதிக்கம் செய்யத் துவங்கிய ஐரோப்பியர்கள் தங்களின் ஆட்சிக்குட்பட்ட காலனி நாடுகளில் வாழும் மக்களின் மொழிகள், பண்பாடுகள், கலாச்சாரங்கள், பழக்கவழக்கங்கள், உணவுமுறைகள், மதங்கள், நம்பிக்கைகள் போன்ற சமுதாயக்கூறுகளை அறிவதில் நாட்டம் கொண்டு ஒவ்வொன்றாகக் கள ஆய்வு செய்து ஆராயத் தொடங்கினர். ஒரு மொழி, ஒரு சமுதாயம் என்று பொருளாதார அடிப்படையில் மட்டும் பாகுபாடுகள் கொண்ட சமுதாயத்தில் வாழ்ந்து பழகிய ஐரோப்பியர்கள் இந்தியத் துணைக்கண்டத்தில் மொழி, பண்பாடு, கலாச்சாரம், மதம், நம்பிக்கைகள், சமூகப் பழக்கவழக்கங்கள் ஆகிய சமூகக் கூறுகளில் கண்ட வேற்றுமைகள் அவர்களை மேலும் மேலும் ஆராயத் தூண்டின. அதன் விளைவாகப் பல மொழிகள், பண்பாடுகள், கலாச்சாரங்கள், நம்பிக்கைகள் சார்ந்த சமுதாய உண்மைகள் கண்டறியப்பட்டன. அவ்வாறான ஆய்வு களுக்கு ஒரு வலுமிக்க அடித்தளம் அமையும் வண்ணமாகப் பத்து ஆண்டுகளுக்கு ஒருமுறை மக்கள்தொகைக் கணக்கெடுப்பு நடத்தி அம்மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் பேசும் மொழி, அவர்கள் பின்பற்றும் மதம், உணவுமுறைப் பழக்கவழக்கங்கள், திருமண உறவுமுறைகள், சாதியினர்கள், பழங்குடியினர்கள், சமுதாயங்களில் காணும் உட்பிரிவுகள் போன்ற மொழியியல் (linguistic), மானிடவியல் (anthropological), சமூகவியல் (sociological) தரவுகளைச் சேகரித்து இந்தியத் துணைக் கண்டத்தில் வாழும் மக்களின் வேற்றுமைகளையும், வேற்றுமை களுக்குரிய அடித்தள ஆதாரங்களையும் புள்ளி விவரங்களுடன் உலகுக்கு எடுத்துக்காட்டினர்.

இந்தியத் துணைக்கண்டத்தில் பேசப்படும் மொழிகளைப் பற்றிக் கீழ்க்கண்ட ஆய்வுகள் மூலம் அறிந்துகொள்ளமுடிகிறது:

1. தனி நபர்களால் கள ஆய்வுகள் மூலம் நடத்தப்பட்ட ஆய்வுகள். பொதுவாக இத்தகைய ஆய்வுகள் ஒரு மொழியைப் பற்றி உள்ளனவாக இருந்தாலும், சில அறிஞர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளையும் ஆராய்ந்துள்ளனர்.
2. கிரியர்சனால் கள ஆய்வுகள் மூலம் தரவுகள் சேகரிக்கப் பட்டுத் தொகுத்து வழங்கப்பட்ட இந்திய மொழிகள் அளவாய்வு (Linguistic Survey of India).
3. சில தனி நபர்களால் குறிப்பிட்ட ஒரு வட்டாரத்தில் வாழும் பழங்குடியினர்கள் மத்தியில் நடத்தப்பட்ட அளவாய்வுகள்.

4. இந்தியப் பல்கலைக்கழகங்கள் பல்கலைக்கழக மானியக் குழு (University Grants Commission) உதவியுடன் அல்லது வேறு ஆய்வு நிறுவனங்களின் உதவியுடன் நடத்தும் ஆய்வுகள் (பல்கலைக்கழக ஆய்வுகள் பெரும்பாலும் முதுகலை, ஆய்வியல் நிறைஞர், முனைவர் பட்ட ஆய்வுகளாக இருக்கும்).

5. இந்திய அரசுக்கு அல்லது மாநில அரசுகளுக்குச் சொந்தமான ஆய்வு நிறுவினங்களில் நடத்தப்பட்டுள்ள ஆய்வுகள்.

6. இந்திய மக்கள்தொகைக் கணக்கெடுப்புகளின் மொழிவாரி அறிக்கைகள்.

7. ஒரு மொழியைச் சேர்ந்த வட்டார, தொழில், சமுதாயக் கிளை மொழிகள் அல்லது பேச்சுமொழிகள் பற்றிய ஆய்வுகள்.

8. தன்னார்வத் தொண்டு நிறுவனங்களால் நடத்தப்படும் ஆய்வுகள்.

மேற்கண்ட ஆய்வுகளை இலக்கிய மொழிகள் பற்றிய ஆய்வுகள், பழங்குடியினர்கள் பேசும் மொழிகள் பற்றிய ஆய்வுகள், சிறுபான்மையினர் பேசும் மொழிகள் பற்றிய ஆய்வுகள், ஒன்றுக் கொன்று தொடர்புடைய ஒரே மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளின் ஒப்பாய்வுகள், ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத பல மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளிடையே நடத்தப்பட்ட ஒப்பாய்வுகள் என வகைப்படுத்தலாம்.

திராவிட மொழிகளின் மூத்த மொழியாகக் கருதப்படும் தமிழ் மொழியின் இலக்கியங்கள் காலத்தால் மிகவும் பழமை யானவை. தற்பொழுது கிடைத்திருக்கும் இலக்கண, இலக்கியங் களுள், கி. மு. 3ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தொல்காப்பியம் மிகவும் பழமையான இலக்கண நூலாகும். ஆனால் தொல்காப்பியத்திற்கு முன்பே தமிழுக்கு அகத்தியர் (கி.மு. 6 அல்லது 7ஆம் நூற்றாண்டு) எழுதிய இலக்கண நூல் இருந்ததைப் பிற இலக்கண, இலக்கிய ஆசிரியர்களின் மேற்கோள்கள் மூலமாக அறிய முடிகிறது. சங்ககால இலக்கியங்களான பத்துப்பாட்டும், எட்டுத்தொகையும் கி. மு. 2 முதல் கி. பி. 4 வரையிலான காலக்கட்டங்களில் எழுதப் பட்ட பாடல்களின் தொகுப்பு நூல்களாகும்.

மலையாள மொழி கி. பி. 5ஆம் நூற்றாண்டிலிருந்து 10ஆம் நூற்றாண்டுக்குள் தமிழிலிருந்து பிரிந்து தனி மொழியாக மாறியிருக்க வேண்டும் என்பது மொழியறிஞர் எல். வி. இராமஸ்வாமி ஐயரின் (L.V. Ramaswami Aiyar, 1936:3) கருத்தாகும். கன்னடம் எனும் சொல் கரு - நாடு எனும் சொல்லிலிருந்து உருவான சொல்லாகும். தமிழின் காப்பிய இலக்கியமான சிலப்பதிகாரத்தில் கருநாடர்கள் பற்றிய குறிப்பு காணக்கிடக்கிறது.

பழைய கன்னடம் என்று அழைக்கப்படும் கன்னட மொழியின் கல்வெட்டு ஆதாரங்கள் கி. பி. 5ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருந்தாலும் அம்மொழியின் முதல் இலக்கியமாகக் கருதப்படும் கவிராஜமார்கா (Kavirajamarga) கி. பி. 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும். இலக்கண, இலக்கியப் பாரம்பரியம் அல்லாத பழங்குடியினர்கள் மட்டும் பேசும் மொழிகள் அல்லாத திராவிட மொழிகளில் அதிக எண்ணிக்கையில் மக்கள்தொகையைக் கொண்ட மொழி கர்நாடக மாநிலம் தக்சிண கன்னட (Dakshina Kannada) மாவட்டத்திலும், கேரள மாநிலம் காசர்கோடு (Kasargod) வட்டத்திலும் பேசப்படும் துளு மொழியாகும். கி. பி. 6ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தெலுங்கு மொழிக் கல்வெட்டுக்கள் ஆந்திரப்பிரதேசம் கடப்பா மாவட்டத்தில் கண்டெடுக்கப் பட்டுள்ளன. இக்கல்வெட்டுக்கள் இரேனாடு சோழ (Rēnāti Cōla) அரசர்களின் காலத்தைச் சேர்ந்தவைகளாகக் கருதப் படுகின்றன. இதற்கு முந்திய காலக்கட்டத்தைச் சேர்ந்த சமஸ்கிருத (Sanskrit), பிராக்கிருதக் (Prakrit) கல்வெட்டுக்களில் தெலுங்கு மொழியைப் பற்றிய குறிப்புகள் காணக்கிடக்கின்றன. கி.பி. 11ஆம் நூற்றாண்டில் நன்னயாவால் (Nannaya) எழுதப்பட்ட மகாபாரதம் தெலுங்கு மொழியில் எழுதப்பட்ட முதல் இலக்கியமாகும் (Subrahmanyam, 2008: 352).

தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் போன்ற மொழிகள் பெரும்பாலான மக்களால் அறியப்பட்ட மொழி களாகும். ஆனால் இந்நான்கு மொழிகள் தவிரத் திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த பல பழங்குடி இன மக்களால் பேசப்படும் பல மொழிகள் இருப்பதை இன்றளவிலும் பெரும்பான்மையான மக்கள் அறிந்திலர்.

கி. பி. 1816ஆம் ஆண்டு ஏழு மொழிகளை ஒரு மொழிக் கூட்டம் அல்லது ஒரு மொழிக்குடும்பத்தின் அங்கங்கள் என்று பிரான்ஸிஸ் ஒய்ட் எல்லீஸ் (Francis Whyte Ellis) எடுத்துக் காட்டிய காலம் முதல் பற்பல ஆய்வுகள் திராவிட மொழி களிடையே நடத்தப்பட்டுள்ளன. கி.பி. 1856ஆம் ஆண்டு திராவிட மொழிகளின் தந்தை என்று அழைக்கப்படும் இராபர்ட் கால்டுவெல் (Robert Caldwell) 12 மொழிகளை ஆராய்ந்து அவை அனைத்தும் ஒரே மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிகள் என்று முடிவுசெய்து அம்மொழிக் குடும்பத்திற்குத் "திராவிட மொழிக்குடும்பம்" எனப் பெயரிட்டார்.

கிரியர்சன் நடத்திய இந்திய மொழிகள் அளவாய்வு ஏற்கெனவே ஆய்வுகள் மூலம் திராவிட மொழிகள் என நிரூபிக்கப்

பட்ட மொழிகளுடன் வேறு பல மொழிகளையும் மொழிகளின் வட்டாரக் கிளை மொழிகளையும் அடையாளங் காட்டியது. பின்னர் வந்த வின்பீல்டு (W.W. Winfield), முர்ரே பி. எமனோ (Murrey B. Emeneau), பெர்டு கஹன் (Ferd Hahn), டேனிஸ் பிரே (Danys Bray), தாமஸ் பர்ரோ (Thomas Burrow), சுதிபூசன் பட்டாச்சார்யா (Sudhibhushan Bhattacharya) போன்ற மொழி யறிஞர்கள் கள ஆய்வுகள் செய்து பல திராவிட மொழிகளைக் கண்டறிந்தனர். இதன் பின்னர் இந்தியப் பல்கலைக் கழகங் களிலும், ஆய்வு நிறுவனங் களிலும் ஆய்வுப் பணிகளை மேற் கொண்ட பல அறிஞர்கள் பிஎச். கிருஷ்ணமூர்த்தி (Bh. Krishnamurti), பி. எஸ். சுப்ரமண்யம் (P.S. Subrahmanyam), டி. என். சங்கர பட் (D.N. Shankara Bhat), பி.ஆர். இராமகிருஷ்ண ரெட்டி (B.R. Ramakrishna Reddy), பி. பி. மகபத்ரா (B.P. Mahapaatra), எம். இஸ்ரேல் (M. Israel), ஜி.வி. நடராஜன் (G.V. Natarajan), ஆர். பாலகிருஷ்ணன் (R. Balakrishnan), எஸ். ஜெய பால் (S. Jeyapal), டியடர் பி. காப் (Dieter B. Kapp), ஆர். பெரியாழ்வார் (R. Perialwar), பைலட் - ராய்சூர் கிறிஸ்டியானா (Pailot - Raichoor Christiane), கமில் வி. சுவலபில் (Kamil V. Zvelebil), பெரி பாஸ்கரராவ் (Peri Bhaskararao), ஜி. உமா மகேஸ்வர ராவ் (G. Umamaheshwara Rao), ஜெரால்டு டிப்லாத் (Gerald Diffloth), வி. சிதம்பரநாத பிள்ளை (V. Chidambara natha Pillai), எஸ். நடனசபாபதி (S. Natana Sabhapathy), கே. தாமசையா (K. Thomasaiah), ஜி. சுப்பையா (G. Subbaiah), ஸ்டீபன் ஏ. டெய்லர் (Stephen A. Tyler), பி. மகேஸ்வரன் (B. Maheswaran), பிரான்ஷிஸ் எக்கா (Francis Ekka), ஜி. சீனிவாச வர்மா (G. Srinivasa Varma), இராபர்ட் சத்ய ஜோஸப் (Robert Satya Joseph), எஸ். சக்திவேல் (S. Sakthivel), டி. ஆர். பிரதாப் (D.R. Pratap), சி.ஜீன் லாரன்ஸ் (C. Jean Lawrence), என். இராஜேந்திரன் (N. Rajendran) போன்ற பல ஆய்வறிஞர்களின் முயற்சிகளால் பல திராவிட மொழிகள் ஆய்வுகளுக்குட்படுத்தப்பட்டு இன்று திராவிட மொழிகளின் எண்ணிக்கை 41ஆக உயர்ந்துள்ளது.

பல்வேறு காலக்கட்டங்களில் களஆய்வுகள் மூலம் தரவுகளைத் திரட்டி நடத்தப்பட்ட ஆய்வுகள், திராவிட மொழிகளின் ஒப்பாய்வுகள், மக்கள்தொகைக் கணக்கெடுப்புகளில் பதிவாகியுள்ள திராவிட மொழிகளும் அவைகளின் மக்கள் தொகைகளும் போன்ற பல தரவுகளை இந்நூல் உள்ளடக்கியது. திராவிட மொழிகளைப் பற்றியும் அவைகளின் ஆய்வுகளைப் பற்றியும் உள்ள முழுமையான தகவல்கள் இந்நூலில் கொடுக்கப் பட்டுள்ளன. திராவிட மொழி ஆய்வாளர்களுக்கும் திராவிட மொழிகளைப் பற்றி அறிந்துகொள்ள விரும்புபவர்களுக்கும் இந்நூல் சிறந்ததொரு ஆய்வேடாக விளங்கும்.

# இந்தியத் துணைக்கண்ட மொழிச்சூழல்

இந்தியத் துணைக்கண்டம் மொழி, பண்பாடு, நாகரிகம், கலாச்சாரம், மதம், மனித இன உடற்கூறு அமைப்பு ஆகிய வற்றின் அருங்காட்சியகமாகும். இந்தியத் துணைக்கண்டத்தில் வாழும் மக்களிடையே நிலவும் இவை போன்றவற்றில் காணப்படும் வேற்றுமைகள், அவ்வகை வேற்றுமைகளிலும் அவர்களிடம் காணப்படும் ஒற்றுமைகள் ஆகிய மொழியியல், மானிடவியல், சமுதாயவியல் கூறுகள் வேறு எந்தவொரு நாட்டிலும், துணைக்கண்டத்திலும் காண முடியாத மாறுபட்ட நிலைகளில் ஆய்வறிஞர்களை வியக்க வைக்கும் சமூக அறிவியல் உண்மைகளைத் தாங்கி நிற்கின்றன. எனவேதான் இந்தியத் துணைக்கண்டம் மொழியியல் அறிஞர்கள், மானிடவியல் அறிஞர்களின் மத்தியில் ஒரு தனித்துவம் பெற்றுள்ளது. பெய்ன்ஸ் (Baines - *1893:131*)' எனும் அறிஞர் இந்தியத் துணைக் கண்டமானது மொழிகளை ஆராய்ந்து ஒப்பிட்டுப்பார்க்கும் மொழியியலாளர்களின் மகிழ்ச்சிகரமான வேட்டை மைதானமாகத் திகழ்கிறது என்கின்றார். இத்தகைய சிறப்பு மானிட ஆய்வாளர்களின் ஆய்வு களுக்கும் பொருந்தும். மானிடவியல் (anthropology), இனங் களியல் அல்லது இனவரவியல் (ethnology) ஆய்வாளர்கள் பண்பாடு, கலாச்சாரம், நம்பிக்கைகள், மதம் போன்ற தலைப்புகளில் நடத்தப்படும் ஆய்வுகளாக இருந்தாலும் மனித உடலமைப்புகளின் அடிப்படையில் நடத்தப்படும் உடற் கூறு ஆய்வுகளாக இருந்தாலும் பலதரப்பட்ட கலாச்சாரங்கள், பண்பாடுகள், நம்பிக்கைகள், மதங்கள், உடற்கூறுகள் போன்ற ஆய்வுகளுக்கு வேண்டிய தரவுகள் மானிடவியல் அறிஞர் களுக்குத் (anthropologists) தாராளமாக இத்துணைக்கண்டத்தில் கிடைக்கின்றன. மிகப்பழமையான வரலாற்றுக் காலம் முதல் இங்குள்ள மொழி, இன வேறுபாடுகள் வேறு எந்தக் கண்டங்களிலும் காணமுடியாத வேறுபாடுகளுடன் உள்ளன.

ஆப்பிரிக்கக் கண்டத்தில் வாழும் நீக்ரோ (Negro), நீக்ரிட்டோ (Negrito) பழங்குடியினர்களாக இருந்தாலும் அமெரிக்கக் கண்டத்தில் வாழும் சிவப்பு இந்தியப் (Red Indians) பழங்குடியினர்களாக இருந்தாலும் ஆஸ்திரேலியக் கண்டத்தில் வாழும் பழங்குடியினர்களாக இருந்தாலும் அந்தந்தக்

கண்டத்தில் வாழும் பழங்குடி மக்கள் ஒரே மொழிக் குடும்பத்தில் அடங்கும் மொழிகளையும் ஒரே மாதிரியான உடற்கூறுகளைக் கொண்ட இனக் குழுக்களாகவும் விளங்கு கின்றனர். ஆனால் இந்தியத் துணைக்கண்டத்தில் வாழும் மக்கள் கீழ்க்கண்ட நான்கு மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளைப் பேசும் மக்களாவர்:

1. ஆஸ்ரோ - ஆசியாடிக் மொழிக்குடும்பம்
(Austro - Asiatic Language Family)
2. திராவிட மொழிக்குடும்பம்
(Dravidian Language Family)
3. இந்தோ - ஐரோப்பிய மொழிக்குடும்பம்
(Indo - European Language Family)
4. திபெத்தோ - சீனம் மொழிக்குடும்பம்
(Tibeto-Chinese Language Family)

இந்தோ - ஐரோப்பிய மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த இந்தோ-ஆரியன் (Indo-Aryan), இந்தோ - ஈரானியன் (Indo- Iranian) ஆகிய துணை மொழிக்குடும்பங்களைச் (subfamily) சேர்ந்த மொழிகளும், திபத்தோ-சீனம் மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த திபெத்தோ-பர்மன் (Tibeto-Burman) துணை மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளும் இந்தியத் துணைக் கண்டத்தில் பேசப்படுகின்றன. மேலும் ஆஸ்த்ரோ-ஆசியாடிக் மொழிக்குடும்பத்தைச் சார்ந்த கிழக்கு ஆஸ்த்ரோ-ஆசியாடிக் (Eastern Austro-Asiatic), முண்டா பிரிவு (Munda group), ஆகிய இரு பிரிவுகளிலும் காணும் மொழிகள் இந்தியத் துணைக் கண்டத்தில் பேசப்படுகின்றன. தற்காலத்தில் மேற்கண்ட நான்கு மொழிக்குடும்பங்களைச் சேர்ந்த மொழிகள் பேசப்பட்டாலும், இவை தவிர மேலும் சில மொழிக்குடுப்பங்களைச் சேர்ந்த மொழிகளைப் பேசும் மக்கள் இந்தியத் துணைக் கண்டத்தில் வாழ்ந்திருக்க வேண்டும் என்பது இந்தியத் துணைக் கண்டத்தில் வாழும் மக்களையும் அவர்கள் பேசும் மொழிகளையும் உடற் கூறுகளையும் ஆய்வு செய்த அறிஞர்களின் (Indologist) கருத்தாகும்.

மிகவும் பண்பட்ட நாகரிகமாகக் கருதப்படும் மொஹஞ் சொதாரோ (Mohanjodaro), ஹரப்பன் (Harappa) நாகரிகக் காலங்களில் வாழ்ந்த மக்கள் திராவிட மொழிகள் பேசும் மக்களாக இருந்திருக்க வேண்டும் என்பது அறிஞர்களின் கருத்து. இதற்கு ஆணித்தரமான ஆதாரங்களாக விளங்குவது இந்த நாகரிகம் தழைத்தோங்கித் திகழ்ந்த பகுதிகளில் அங்கும் இங்குமாகச் சிறுசிறு கூட்டங்களாக வாழும் வட திராவிட

மொழியாகிய பிராஹீய் (Brahui) மொழி பேசும் மக்கள் இன்றும் காணப்படுவதாகும். பாகிஸ்தான் நாட்டின் பலுச்சிஸ்தான் மாகாணத்திலும் அதன் எல்லையோரப் பகுதிகளில் உள்ள ஆப்கானிஸ்தான், ஈரான், தெற்கு ரஷ்யா ஆகிய நாடுகளில் வாழும் பிராஹீய் (Brahui) பழங்குடி மக்கள் வாழும் பகுதிகளில் காணப்படும் திராவிடமொழியும் 4000 ஆண்டுகள் பழமை வாய்ந்த மொஹஞ்சொதாரொ - ஹரப்பன் நாகரிகச் சான்றுகளும் திராவிடர்கள் மத்திய ஆசியாவிலிருந்து (Central Asia) இங்குக் குடியேறியவர்கள் எனத் தீர்மானிக்க வைக்கின்றன என்கின்றார் வின்டர்ஸ் (வின்டர்ஸ் - Winters, *1989)*[2] எனும் அறிஞர். மேலும் இப்பகுதிகளில் வாழ்ந்த பல இனங்களின் மொழிகளைச் சேர்ந்த மக்களின் மத்தியில் நடக்கும் வியாபாரத்திற்காகப் பலதரப்பட்ட நாகரிகங்கள் வழங்கிய பல பண்பாட்டுக் கூறுகளை உள்ளடக்கிய ஒரு பொதுவான மொழி (common lingua franca) தேவைப்பட்டது. அப்படிப்பட்ட பொதுவான மொழியாகத் திராவிட மொழி மத்திய ஆசியாவின் மேற்குப் பகுதியான பாக்டிரியா (Bacteria) முதல் கிழக்குப் பகுதி நாடுகளான சீனம் (China), மங்கோலியா (Mangolia) வரையில் அங்கு வாழ்ந்த திராவிட மொழிகள் பேசும் மக்களிடமும், திராவிட மொழிகளல்லாத பிற மொழிகள் பேசும் மக்களிடையேயும் வழங்கியது என்பது வின்டர்ஸின் கருத்தாகும் (வின்டர்ஸ் - Winters:*1989)*[3].

சமஸ்கிருத மொழி வேதமாகிய ருக் (Rig) வேதச் சொற்களில் காணும் ஆரிய மொழிகள் அல்லாத பிறமொழிச் சொற்களிலிருந்து ஆரியர்கள் இந்தியத் துணைக்கண்டத்தின் பஞ்சாப் (Punjab) பகுதிகளில் மட்டும் குடியேறியிருந்த காலக் கட்டத்திலேயே திராவிட மொழிச் சொற்கள் கடன் வாங்குதல் மூலம் ஆரிய மொழிக்குள் ஊடுருவியுள்ளதைக் காணமுடிகிறது. திராவிட மொழியிலிருந்து ஆரிய மொழிகள் சொற்களைக் கடன் வாங்கிய 3000 ஆண்டுளுக்கு முன்பே திராவிட மொழி இப்பகுதிகளில் நிலைத்திருந்ததை இது காட்டுகிறது (எமனோ - Emeneau, *1956)*[4]. திராவிட மொழியிலிருந்து ருக்வேத காலத் திலேயே ஆரிய மொழிகள் சொற்களைக் கடன்வாங்கியிருப்பதும், பிராஹீய் (Brahui) எனும் வடதிராவிடமொழி பாகிஸ்தானின் பலுச்சிஸ்தான் மாகாணப்பகுதிகளில் இன்றளவிலும் பேசப் படுவதும் இத்தகைய சமூக நிகழ்வுகளை உறுதிப்படுத்துகின்றன. ஆரியர்கள் முதன் முதலில் குடியேறிய இந்தியத் துணைக் கண்டத்தின் வடமேற்குப்பகுதியான பஞ்சாப் பகுதிகளில் ஏற்கெனவே திராவிடர்கள் குடியிருந்ததை இதன் மூலம் அறிய முடிகிறது. இத்தகைய வரலாற்று நிகழ்வுகள் கி.மு. 3000 ஆண்டு களுக்கு முன்னரே நிகழ்ந்துள்ளன. ருக் (Rig) வேதத்தில் காணும்

ஆரிய மொழிச் சொற்களல்லாத பிற மொழிச் சொற்களை ஆராய்ந்த குய்பர் (Kuiper, *1992*) எனும் அறிஞர் அவ்வகைச் சொற்கள் எந்த மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த சொற்கள் என்பதைக் கண்டுபிடிப்பது எளிதான காரியமன்று என்கின்றார். சில சொற்கள் திராவிட மொழிச் சொற்களாகவும், சில சொற்கள் முண்டா மொழிச் சொற்களாகவும் உள்ளன. இருப்பினும் பல சொற்கள் இவ்விரண்டு மொழிக் குடும்பச் சொற்களோடு ஒப்பிடுகையில் எந்த மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த சொற்கள் என முடிவு செய்ய முடியாதபடி உள்ளன. அவ்வகைச் சொற்கள் இவ்விரண்டு மொழிக் குடும்பங்களைச் சேர்ந்த மொழிகள் அல்லாது, வேறு ஒரு மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிச் சொற்களாக இருக்கக் கூடும் என்பது அவரது கருத்தாகும்.[5] எனவே இந்தியத் துணைக்கண்டத்தில் தற்பொழுது பேசப்படும் நான்கு மொழிக் குடும்பங்களைச் சேர்ந்த மொழிகள் தவிர வேறு மொழிக் குடும்பம் அல்லது மொழிக்குடும்பங்களைச் சேர்ந்த மொழிகளும் பேசப்பட்டன. அத்தகைய மொழிகளும் திராவிட, முண்டா, ஆரிய மொழிகளில் ஊடுருவி ஒரு தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கக் கூடும் (பர்ரோ - Burrow, *1958*).[6] இம்மொழிகளை மூன்றாம் நிலை அடித்தட்டு மொழிகள் (Third Substratum Languages) என மொழியறிஞர்கள் அழைக்கின்றனர். மத்தியப் பிரதேசம், மகாராஷ்டிரம் ஆகிய மாநிலங்களில் வாழும் நஹால் (Nahal) பழங்குடியின மக்கள் பேசும் நஹாலி (Nahali) மொழி இத்தகைய மூன்றாம் நிலை அடித்தட்டு மொழிகளுக்கு உதாரணமாக விளங்குகிறது. நஹால் (Nahal) பழங்குடியினர்களின் தாய்மொழி நஹாலி மொழியாகும். ஆனால் தற்காலத்தில் அவர்கள் வாழும் பகுதிகளில் வாழும் கொர்கு (Korku) பழங்குடியினர் பேசும் கொர்கு (Korku) மொழிக்கு மாறிவிட்டனர். இருப்பினும் கொர்கு மொழியில் இல்லாத பல மொழிக்கூறுகள் அவர்களுடைய பேச்சு வழக்கில் காணப்படுகின்றன. இத்தகைய மொழிக்கூறுகள் இவர்களின் தாய்மொழியான நஹாலி மொழியின் கூறுகளாகக் கருதப்படு கின்றன. ஆனால் நஹாலி மொழிக் கூறுகளாகக் கருதப்படும் இத்தகைய மொழிக்கூறுகள் முண்டா பிரிவைச் சேர்ந்த பிற மொழிகளோடு ஒப்பிட்டுப்பார்ப்பனவாக இல்லை. எனவே, நஹாலி மொழி ஆஸ்திரிய மொழிக்குடும்பத்தின் முண்டா பிரிவைச் சேர்ந்த மொழியன்று என்று கருதும் மொழி யியலாளர்கள், இதைத் தற்பொழுது பேசப்படும் மொழிக் குடும்பங்கள் அல்லாது முற்றிலும் அழிந்து விட்ட மூன்றாம் நிலை அடித்தட்டு மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழியாகக் கருதுகின்றனர். கிரியர்சன் (Grierson), சுதிபூஷன் பட்டாச்சார்யா (Sudhibhushan Bhattacharya), தாமஸ் பர்ரோ (Thomas Burrow)

ஆகிய மொழியறிஞர்கள் ஆரிய மொழிகளல்லாத பல மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளின் தாக்கங்களை ஆரிய மொழியில் காணமுடிகிறது என்கின்றனர்.

கி.பி. 2000 ஆம் ஆண்டுவாக்கில் இந்தோ - ஐரோப்பிய மொழி பேசும் மக்களில் ஒரு கூட்டத்தினர் அல்லது சில கூட்டத்தினர், வடமேற்குக் கணவாய்கள் (Northwest Passes) வழியாக இந்தியத் துணைக்கண்டத்திற்குள் நுழைந்துள்ளனர். இவர்களது மொழியே பிற்காலத்தில் சமஸ்கிருதம் என அழைக்கப்பட்டது (எமனோ - Emeneau, 1954).[7] இந்தோ - ஐரோப்பிய மொழி பேசும் இம்மக்கள் குடியேறிய காலக் கட்டங்களில் திராவிட மொழி பேசும் மக்கள் இந்தியத் துணைக் கண்டம் முழுவதும் பரவியிருந்தனர். ஆனால் ஐரோப்பியர்கள் இந்தியாவில் பேசப்படும் மொழிகள், அம்மொழிகளைப் பேசும் மக்கள் பற்றிய ஆய்வுகளைக் கி.பி. 16 ஆம், கி.பி. 17ஆம் நூற்றாண்டுகளில் தொடங்கிய காலத்தில் திராவிட மொழிகள் பேசும் மக்கள் மத்திய இந்தியா, கிழக்கு இந்தியா, தென் இந்தியா ஆகிய பகுதிகளில் மட்டும் வாழ்ந்து வந்தனர். எனவே ஆரியர்களின் வருகைக்குப் பின்னர் வட இந்தியாவில் வாழ்ந்த திராவிட மொழிகளைப் பேசும் மக்கள் வட இந்தியாவிலிருந்து வெளியேறிப் பிற பகுதிகளில் குடியேற வேண்டிய சூழ்நிலை ஒரு காலக் கட்டத்தில் உருவாகியுள்ளது. மேலும் வட இந்தியாவிலும் வடமேற்கு இந்தியாவிலும் பரவியிருந்த திராவிட மொழிகள் பேசும் மக்களில் பலர் தங்களின் தாய்மொழிகளிலிருந்து மாறி ஆரிய மொழிகளைத் தாய்மொழிகளாக ஏற்றுக் கொண்டுள்ளனர். தற்பொழுது குஜராத், மகாராஷ்டிரம், இராஜஸ்தான், மத்தியப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் வாழும் பீல் (Bhil) பழங்குடி மக்களும், குஜராத், இராஜஸ்தான் மாநிலங்களில் வாழும் மீனா (Mina) அல்லது பீல் மீனா (Bhil Mina) என அழைக்கப்படும் பழங்குடி மக்களும் முதலில் திராவிடமொழி பேசும் மக்களாக இருந்து பின்னர் ஆரிய மொழி பேசுபவர்களாக மாறிய பழங்குடி மக்களாகக் கருதப்படுகின்றனர். இவர்களின் இனப்பெயர் களான பீல் (Bhil), மீனா (Mina) எனும் சொற்கள் திராவிடச் சொற்களான வில் (vil), மீன் (mīn) என்ற சொற்களிலிருந்து வந்த சொற்களாகக் கருதப்படுகின்றன (மனோகரன், 1986).

திராவிட மொழிகள் பேசும் மக்கள் மத்திய தரைக் கடல் பகுதிகளிலிருந்து இந்தியத் துணைக்கண்டத்தில் குடிபுகுமுன், முண்டா மொழிகளைப் பேசும் மக்கள் இத்துணைக் கண்டத்தில் பரவலாகப் பல பகுதிகளில் வாழ்ந்து வந்தனர். முண்டா மொழிகளைப் பேசும் மக்கள் சுமார் கி. பி. 3500 வாக்கில் இந்தியத் துணைக்கண்டத்தில் குடியேறியிருக்கலாம் எனக் கருதப்படுகிறது

(ஸைட் & ஸைட், Zide and Zide, *1973*). முண்டா மொழிகளின் ஒரு பிரிவினர் டிடய் (Didayi) போண்டோ (Bondo), குதொப் (Gutob) மொழிகள் பேசும் பழங்குடியினர்களும், வேறு ஒரு பிரிவினராகிய கடியா (Kharia), ஜீவாங் (Juang), சௌரா (Saora), பரங்கி (Parengi) மொழிகள் பேசும் பழங்குடியினர்களும் அஸ்ஸாம் பள்ளத்தாக்கு (Assam Valley) வழியாக இந்தியத் துணைக் கண்டத்திற்குள் வந்திருக்க வேண்டும் என்றும் மற்றொரு பிரிவினராகிய கொர்கு (Korku) மொழிபேசும் பழங்குடி மக்கள் வடமேற்கு இந்தியப் பகுதி வழியாகவும், மற்றொரு பிரிவினரான கேர்வாரி (Kherwari) மொழிப் பிரிவினராகிய சந்தாலி (Santhali), முண்டாரி (Mundari), ஹோ (Ho) மொழிகளைப் பேசும் பழங்குடியினர்கள் கின்னோர் (Kinnaur), நேப்பாளம் (Nepal) பள்ளத் தாக்குகள் வழியாக இந்தியாவிற்குள் வந்திருக்க வேண்டும் என்றும் சுதிபூஷன் பட்டாச்சார்யா (*1975:12*) கருதுகின்றார். எது எப்படி இருப்பினும் கி.மு. *1500* வாக்கில் தற்பொழுது இந்தியத் துணைக் கண்டத்தில் பேசப்படும் நான்கு மொழிக்குடும்பங்களைச் சேர்ந்த மொழிகளைப் பேசும் மக்கள் நேருக்கு நேர் தொடர்பு கொண்டு வாழ்ந்து வந்தனர் என்கின்றார் சுனிதிகுமார் சட்டர்ஜி (Suniti Kumar Chatterji - *1965:15*).[8] இந்நான்கு மொழிக் குடும்பங் களின் மொழிகளைப் பேசும் மக்கள் நேருக்கு நேர் தொடர்பு கொண்டு வாழ்ந்த காலக்கட்டங்களின் ஆரம்பக் காலங்களில் அவர்களின் மத்தியில் ஒரு சுமுகமான, இணக்கமான நல்லுறவுகள் இருந்திருக்க வேண்டும். எனவேதான் இவர்களின் மொழி, கலாச்சாரம், பண்பாடு, மதம், நம்பிக்கைகள் ஆகிய சமுதாயக் கூறுகளில் ஒரு மொழிக் குடும்பத்தைச் சார்ந்த மொழிக்கூறு பிற மொழிக்குடும்பங்களுடன் இணைவது, ஒரு மொழி பேசும் மக்களின் சமுதாயக் கூறுகள் பிறமொழிகள் பேசும் மக்களின் சமுதாயக் கூறுகளுடன் இணைவது போன்ற பலதரப் பட்ட சமுதாய நிகழ்வுகள் மொழி, பண்பாட்டுக் கூறுகள் பெருமளவில் கடன் வாங்கப்பட்டதன் மூலம் நிகழ்ந்துள்ளன. இத்தகைய நிகழ்வுகள் மூலம் பல மொழிக் கூறுகள் மொழிக் குடும்பங்களின் எல்லையைத்தாண்டி வேறு மொழிக்குடும்பங்களில் ஊடுருவி ஒன்று திரண்டுள்ளதைத் தற்காலத்தில் மொழியியல் ஆய்வுகள் மூலம் பல அறிஞர்கள் சுட்டிக்காட்டியுள்ளனர். மொழி, பண்பாட்டுக் கூறுகள் மட்டுமல்லாது ஓர் இனத்தைச் சேர்ந்த மக்கள் பிற இன மக்களோடு கொண்ட தொடர்புகள் காரணமாக உடற்கூறுகளிலும் பலவகை மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன. ஓர் இன மக்கள் இன்னொரு இன மக்களிடம் கொண்ட உறவு களால் ஆரியன் (Aryan), திராவிடன் (Dravidian), கோலாரியன் (Kolarian), மங்கோலியன் (Mongolian) எனப் பாகுபடுத்தப்பட்ட மக்களின் இரத்தங்களில் ஏற்பட்ட கலப்பு காரணமாக "இந்திய

மனிதன் (Indian Man)" என்ற ஒரு புது வகையான மனிதன் வேத காலத்தின் இறுதிப்பகுதிகளில் தோற்றுவிக்கப்பட்டுள்ளான் என்கின்றார் சுனிதிகுமார் சட்டர்ஜி (1972).[9]

ஆரியர்கள் முதன்முதலில் இந்தியத் துணைக் கண்டத்தில் குடியேறியபோது அடிக்கடி இடம்பெயரும் நாடோடிகளாகத் தங்களின் வாழ்க்கையை நடத்தினர். எனவே, இங்குக் குடியிருந்த பூர்வீகக் குடிமக்களிடம் நட்பை வளர்த்துக்கொண்டு அவர்களுடைய கலாச்சாரம், மொழி, பண்பாடு, மத நம்பிக்கைகள் ஆகிய சமுதாயக் கூறுகளோடு தங்களுடைய வாழ்க்கைமுறைகளை அவர்களோடு ஒத்துப் போகும் அளவுக்குத் தங்களை மாற்றிக் கொள்ள வேண்டிய சமுதாயச் சூழ்நிலை ஏற்பட்டது. ஆரிய மொழி மாறுபட்ட உணவு முறைகள், இனக்கலப்புகள், இயற்கைச் சூழ்நிலைகள் ஆகிய காரணங்களால் அவர்களுடைய பழைய வேதகால மொழியிலிருந்து மாறுபட்டுப் பின்தங்கிய நிலைக்குத் தள்ளப்பட்டது (திவானா - Diwana, 1969:72).[10] அவ்வாறு ஆரியர்கள் ஆரியர்களல்லாத பிற இன, மொழி மக்களோடு கலந்து உறவாடிய காரணங்களால், பல மொழிகள் பேசும் மக்களிடையே கருத்துப்பரிமாற்றங்கள் செய்து கொள்வதற்குப் பல மொழிகள் சார்ந்த கலப்பு மொழிகள் உருவாகின (Pidgin Languages). இவ்வாறு பல மொழிகள் பேசும் மக்களிடையே கருத்துப்பரிமாற்ற நிலையில் இருந்த கலப்பு மொழிகள் பிற்காலத்தில் ஒரு குறிப்பிட்ட சமுதாய அல்லது பழங்குடி மக்களின் தாய்மொழிகளாகவும் (Creole) மாறின. மத்திய இந்தியாவில் பேசப்படும் பத்ரி (Bhadri), சாதரி (Sadari), நாக்புரியா (Nagpuria) போன்ற மொழிகள் தாய்மொழிகளாகிவிட்ட கலப்பு மொழி களுக்கு உதாரணங்களாகத் திகழ்கின்றன. மேலும் மராட்டியர் களின் தாய்மொழியான மராட்டி (Marathi) மொழியும் மத்திய இந்தியக் காட்டுப் பகுதிகளில் உள்ள சந்தைகளில் (market place) கூடிய பல தரப்பட்ட இனத்தைச் சேர்ந்த மொழிகள் பேசும் மக்களின் மத்தியில் கருத்துப் பரிமாற்ற மொழியாக உருவெடுத்த கலப்பு மொழியிலிருந்து தோன்றிய மொழி எனக் கோகலே (Khokle, 1994) எனும் மொழி அறிஞர் கருதுகின்றார். மராட்டிய மொழியின் பெயர் திராவிட மொழியின் மரம் (maram "tree, wooded area or forest") எனும் சொல் ஆரிய மொழியின் ஹட்டா (haṭṭa "trading place, market") எனும் சொல் ஆகிய இரு சொற்களின் கூட்டுச் சொல்லாகும் என்பது கோகலேவின் கருத்தாகும்.

திராவிடர், ஆரியர்களின் ஒற்றுமையை அவர்களின் மொழிகளாகிய சமஸ்கிருதத்திற்கும் தமிழுக்கும் இலக்கணங்கள் தோன்றியதற்குரிய புராணக்கதையிலிருந்து தெளிவாக உணரலாம். சமஸ்கிருத இலக்கண ஆசிரியராகிய பாணினிக்கும் (Panini),

தமிழ் இலக்கண ஆசிரியராகிய அகத்தியருக்கும் (Agastya), முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான் முறையே சமஸ்கிருதம், தமிழ் மொழிகளைக் கற்றுக்கொடுத்து இலக்கணம் எழுத வைத்தார் என்று இந்தியப் புராணக்கதை கூறுகிறது. இதற்கு மகேஸ்வர (Maheshwara) இலக்கணம் என்றும், பின்னர்த் தோன்றிய ஐந்திர (Aindra) இலக்கணக் கொள்கை குமார (Kumara) அல்லது கார்த்திகேயா (Karthikeya) என்று அழைக்கப்படும் கடவுளால் அவரை நினைத்துத் தவம் செய்த சர்வவர்மா என்பவருக்குக் கார்த்திகேயாரால் கற்றுத் தரப்பட்ட இலக்கணமாகக் கருதப்படு கிறது. இந்த இலக்கணம் முதலில் கார்த்திகேயரின் மயில் வாகனத்தின் பெயரால் கலாப வியாகர்ணா (Kalap vyakarana) என்றழைக்கப்பட்டது. பின்னர் இது கௌமார (Kaumara) அல்லது குமார (Kumara) என அந்தக் கடவுளின் பெயரால் அழைக்கப்பட்டது (Krishnan, 1999). கார்த்திகேயன், முருகன் அல்லது சேயோன் எனும் பெயரில் தமிழ்க் கடவுளாகக் கருதப் படுகின்றார். அகத்தியரைப் பற்றிய புராணக் கதைகள் பலவாறாகக் கூறப்பட்டாலும் தென்னிந்தியாவில் காவேரி உற்பத்தியாகும் குடகு மலையும், மலையருவிகளின் தாயாகிய பொதிகை மலையும் அவர் வாழ்ந்த இடங்களாகக் கருதப்படுகின்றன. ஆரியர்களின் வருகையின் போது இங்குள்ள கலாச்சாரம், பண்பாட்டுக் கூறுகளால் ஆரியமொழியில் ஆரியரல்லாத மொழிகளின் கலப்பு ஏற்பட்ட வரலாற்றுக் காலத்திற்குப் பின்னர் ஆரிய மொழி பிற மொழிகளின் மேல் ஒரு தாக்கத்தை ஏற்படுத்தும் சமூகச் சூழ்நிலைகள் உருவாயின. அப்படிப்பட்ட காலக்கட்டத்தில் தான் இந்தியத் துணைக் கண்டத்திற்குள் கூட்டம் கூட்டமாகக் குடியேறிய ஆரிய இனம் தன்னுடைய வலிமையினால் ஆதிக்கத்தை ஏற்படுத்துவதுடன் தன்னுடைய ஆதிக்கத்தையும் செல்வாக்கையும் நிலைநிறுத்தும் பொருட்டுப் பிற இனங்களோடு ஏற்படும் கலப்புகளைத் தவிர்த்துப் பிற மொழிச்சூழல்களிலிருந்து மாறு பட்ட மொழிச் சூழலாகச் சமஸ்கிருத மொழி உன்னதத் தெய்வீக மொழியாக, கல்வி கேள்விகளில் பயன்படும் அறிவியல்மொழியாக உயர்த்தப்பட்டு இந்தியத் துணைக்கண்டத்தில் வாழும் பல இன மக்களுக்குரிய பொதுமொழியாக (Common Language) உருவெடுக்கச் செய்துள்ளனர். இவ்வாறாகச் சமஸ்கிருதம் தெய்வீகமொழி என்ற நிலைக்கு உயர்த்தப்பட்டதன் காரணமாக, பிராமணர்கள் சமஸ்கிருத மொழி தவிரப் பிற பிராக்ருத மொழிகளையும் பிற இனத்தவர்கள் மொழியையும் பேசக்கூடாது என்பது மட்டுமல்ல காதால் கேட்கவும் கூடாது என்ற ஒரு சமுதாயச் சட்டம் இயற்றப்பட்டு, அப்படி பேசும் அல்லது கேட்கும் அந்தணர்கள் தங்களின் சாதியிலிருந்து ஒதுக்கி வைக்கப்படும் நிலை உருவானது (பட்டாச்சார்யா, 1969:382).[11]

# திராவிடமும் தமிழும்

திராவிட மொழிகள் குறித்தும் திராவிட மொழிகள் பேசும் மக்களைக் குறித்தும் மிகப் பழமையான இராமாயணம், மகாபாரதம் போன்ற காவியங்களிலும் வாய்மொழி இலக்கியமாக இருந்து பின்னர் எழுத்துருவாக்கப்பட்ட வேதங்களிலும் குறிப்புகள் காணக்கிடக்கின்றன. சமஸ்கிருத மொழிக்கு இலக்கணம் வகுத்த பாணினியின் காலம் கி. மு. 5ஆம் நூற்றாண்டாகும். தமிழுக்குக் கிடைத்துள்ள முதல் இலக்கணமாகிய தொல்காப்பியம் கி.மு. 3ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருந்தாலும், தொல்காப்பியத் திற்கு முன்னர், கி.மு. 6 அல்லது 7ஆம் நூற்றாண்டில் அகத்திய முனிவரால் ஓர் இலக்கண நூல் எழுதப்பட்ட செய்திகள் தமிழ் மொழி வரலாற்றில் காணக்கிடக்கின்றன (பவானந்தம் பிள்ளை, 1925). எனவே தமிழ்மொழியின் இலக்கணப் பாரம்பரியம் சமஸ்கிருத மொழியின் இலக்கணப்பாரம்பரியத்திற்கு முந்தைய காலத்தைச் சேர்ந்தது என்பது தெளிவாகிறது. சமஸ்கிருத மொழியில் உள்ள நான்கு வேதங்களில் முதல் வேதமாகிய ருக் (Rig) வேதத்தின் காலம் கி. மு. 1400 என்று குய்பர் (1974) போன்ற அறிஞர்கள் கருதுகின்றனர். சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் வளர்த்த சங்ககாலத் தமிழ் மொழியின் காலக்கட்டத்திலும் தமிழகத்தில் மத, அறிவியல் போன்ற துறைகளில் சமஸ்கிருத மொழிக்கலப்பு இருந்துள்ளது. சமஸ்கிருத மொழியை அந்தணர் போன்ற ஒரு குறிப்பிட்ட சமூகத்தினர் பேசும், படிக்கும் கல்வி அறிவு உடையவர்களாக இருந்தனர். தமிழ் மொழியில் மட்டும் புலமை பெற்றுக் கல்வி கேள்விகளில் சிறந்து விளங்கியவர்கள் சான்றோர் என அழைக்கப்பட்டனர்.

தமிழகத்தைப் பற்றிய குறிப்புகளும் திராவிடர்களைப் பற்றிய குறிப்புகளும் பல வரலாற்று ஆசிரியர்களின் குறிப்பு களில் காணக்கிடக்கின்றன. பியூதிங்கர் டேபிள் (Peutinger Tables) என அதைத் தயாரித்த ஆசிரியரின் பெயரால் வழங்கப்படும் உரோமன் வரைபடத்தின் (Roman Maps) இந்தியப் பகுதிகளில் ஆந்ரெ இந்தியா (Andre India), டமிரிசெ (Damirice) என்ற குறிப்புகள் காணப்படுகின்றன. இவை முறையே தெலுங்கு (Telugu), தமிழ் பேசும் மக்களைக் கொண்ட நாடுகளைக் குறிக்கும் சொற்களாகக் கருதப்படுகின்றன. அலெக்சாண்ட்ரியாவைச் (Alexandrian) சேர்ந்த பூகோள அறிவியலாளரான தாலமி (Ptolemy) தமிழகத்தை லுமிரிகீ (Lumiriki) என அழைத்துள்ளார். மற்றொரு

பகுதியில் இவர் சிதிய டிமிரிசெ (Scytia Dymirice) என அழைத்துள்ளார். இரேவன்னா (Revenna) டிமிரிக (Dimirica) என்பது மூன்று வகையான இந்திய வட்டாரங்களில் ஒன்று எனக் கூறியுள்ளார். ஹீவன் சுவங் (Hwen Thsang) தமிழகத்தைச் சி-மொ-லொ (Tchi-mo-lo) எனக் குறிப்பிட்டுள்ளார். இது திமல (Dimala) அல்லது திமர (Dimara) எனவும் வாசிக்கப்படுகிறது (கால்டுவெல், 1856:10). சங்க காலத் தொடக்கம் முதல் சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் கிரேக்கம், உரோமாபுரி மன்னர்களோடு தொடர்பு கொண்டு வர்த்தகம் புரிந்து வந்த காரணத்தால் சந்திரகுப்த மௌரியர் (Chandra Gupta Maurya) காலத்தில் வாழ்ந்த மெகாஸ்தனீஸ் (Megasthenese) எனும் கிரேக்கர், உரோமாபுரியைச் சேர்ந்த ஸ்ரேபோ (Strabo) ஆகியவர்களின் குறிப்புகளில் தமிழகத்தின் பல பகுதிகளைப் பற்றிய குறிப்புகள் காணக்கிடக்கின்றன. கி.பி. முதல் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த பன் கௌ (Pan Kou) எனும் சீன எழுத்தாளர் காஞ்சிபுரத்தை ஹீவங்செ (Houangtche) எனக் குறிப்பிட்டுள்ளார் (சுப்ரமணியன், 1966). இந்தியத் துணைக்கண்டப் பகுதிகள் அனைத்தையும் ஓர் ஆட்சியின் கீழ்க் கொண்டு வந்ததாகக் கருதப்படும் அசோக சக்கரவர்த்தியின் ஆட்சிக்காலத்தில் சேர, சோழ, பாண்டிய மன்னர்கள் தனித்தே ஆண்டுவந்தனர். அசோகருடைய இரண்டாம் கல்வெட்டில் சோழர், பாண்டியர், சதியபுத்திரர், கேரள புத்திரர், தாம்பிரபரணி ஆகிய நாடுகள் அசோகரின் ஆட்சியின் கீழல்லாத சுதந்திர நாடுகளாகக் குறிப்பிடப்பட்டுள்ளன. இந்நாடுகளில் தாம்பிரபரணி என்பது இலங்கையைக் குறிக்கும். சதியபுத்திரர் என்பவர்கள் துளு நாட்டைச் சேர்ந்த கோசர்களாகக் கருதப்பட்டனர் (சுப்ரமணியன், 1966). ஆனால் தற்பொழுது அந் நாடு தகடூரை ஆண்ட அதியமானின் நாடாகக் கருதப்படுகிறது.

இராமாயணத்திலும் மகாபாரத்திலும் தமிழ் மன்னர்கள், தமிழ் மக்கள், தமிழ் நாட்டில் கிடைக்கும் பொருட்கள் பற்றிய பல குறிப்புகள் காணக்கிடக்கின்றன. பாண்டிய மன்னர்களின் தலைநகரமாகிய கபாடபுரம் முத்துக்குப் பெயர் பெற்றதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. கௌடில்யர் (Kautilya) எழுதிய அர்த்த சாஸ்திரம் (Artha Śāstra) எனும் நூலில் கபாடபுரத்தைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. மகாபாரத்தில் தமிழக மன்னர்கள் மகாபாரதப் போரில் கலந்து கொண்ட தகவல்கள் உள்ளன. சிங்களர்களின் பாரம்பரியப் புராணக் கதை அர்ஜுனன் பதினான்கு வருட வனவாசக் காலத்தில் பாண்டிய மன்னர் ஒருவரின் மகளை மணந்ததாகத் தெரிவிக்கிறது. பாண்டியர் என்ற சொல் பாண்டவர்களின் தந்தையின் பெயராகிய பாண்டு என்ற சொல்லிலிருந்து வந்த சொல் என்றும் பாண்டியர்கள் பாண்டவர்களின் வழி

வந்தவர்கள் என்ற செய்தியும் பாரம்பரியப் புராணக் கதைகளில் கூறப்பட்டாலும் (கால்டுவெல், 1856:12) இச்செய்தியின் நம்பகத் தன்மை ஆய்வுக்குரியது.

இந்தியத் துணைக்கண்டத்தில் சமஸ்கிருத மொழி இலக்கிய, இலக்கண மொழியாகவும் பிராக்கிருத (Prakrit) மொழி பேச்சுவழக்காகவும் கருதப்பட்ட காலக்கட்டங்களில் பேச்சு வழக்கு மொழியாகக் கருதப்பட்ட பிராக்கிருத மொழி பல பிரிவுகளாக அடையாளங்கண்டுகொள்ளப்பட்டுள்ளது. மகாராஷ்ட்ரி (Maharashtri), சௌரசேனி (Sauraseni), மகதி (Magadhi) ஆகிய மூன்று முக்கியமான பிராக்கிருத மொழிகள் இத்துணைக்கண்டத்தில் பேசப்பட்டன. இம்மூன்று முக்கியமான பிராக்கிருத மொழிகளுடன் பல முக்கியமில்லாத பிராக்கிருத மொழிகளும் பேசப்பட்டதாகக் கருதப்படுகிறது. இவ்வகை மொழிகளில் திராவிட (Drāviḍa) மொழியும் ஒன்று. இது விபாச (Vibhāshā) என்றும் அழைக்கப்பட்டது. திராவிட மொழி பேசுபவர்கள் திராவிடி (Drāviḍī) என அழைக்கப்பட்டனர். எனவே திராவிட (Drāviḍa), திராவிடி (Drāviḍi) போன்ற சொற்கள் இராமாயண, மகாபாரதக் காலந்தொட்டு வழக்கில் இருந்து வந்தமை தெளிவாகிறது. பைசாசி பிராகிருதம் (Paiśāchī Prakrit) என அழைக்கப்பட்ட பிராகிருத மொழி பல வட்டாரங்களில் பேசப்படும் வட்டார மொழிகளை உள்ளடக்கியது என்றும், இம்மொழிகள் பைசாசி (Paiśāchī), அதாவது பிசாசுகளின் (piśāchas 'demons') மொழிகள் என்ற பொருள்படும்படி அழைக்கப் பட்டுள்ளன என்பது கால்டுவெல்லின் (Caldwell, 1856:5) கருத்தாகும். சமஸ்கிருத, ஜைன, புத்த இலக்கியங்கள் பலவற்றில் திராவிட (Drāviḍa) அல்லது திராமிட (Drāmiḍa) என்ற சொல் தென்னிந்திய மக்களைக் குறிக்கும் சொல்லாகக் கையாளப் பட்டுள்ளது (ஜோஸப், 1989).

திராவிடர்கள் சாதிகளிலிருந்து விலக்கி வைக்கப் பட்டவர்கள் என்றும் இது தென்னிந்தியாவில் வாழும் மக்களைப் பொதுவாகக் குறிக்கும் சொல் என்றும் மனு (Manu) குறிப்பிட்டுள்ளார். திராவிடர் அல்லது திராவிட எனும் சொல் சமஸ்கிருத அறிஞர்களால் தென்னிந்திய மக்களையும் அவர்கள் பேசும் மொழிகளையும் அழைக்கும் ஒரு பொதுச்சொல்லாகப் பல இடங்களில் கையாளப்பட்டுள்ளது. மனு கீழ்க்கண்ட இன மக்களைச் சத்திரிய வர்ணத்திலிருந்து நீக்கப்பட்டு புனிதச் சடங்கு களும் அந்தணர்களோடு தொடர்புகளும் இல்லாத இனங்களாகக் கூறுகின்றார்: பௌண்ட்ரகர் (Pauṇḍrakas), ஒட்டர் (Oḍras), திராவிடர் (Drāviḍas), காம்போஜர் (Kāmbōjas), யவனர் (Yavanas),

சாகர் (Śākas), பாரதர் (Pāradas), பஃலவர் (Pahlavas), சீனர் (Chīnas), கிராடர் (Kirātas), தரதர் (Daradas), காஷஸ் (Khaśas). இவர்களில் திராவிடர் எனக் குறிப்பிடப்படும் மக்கள் மட்டும் தென்னிந்திய மக்களாவர். பிற இனத்தவர்கள் இந்தியத் துணைக்கண்டத்தில் வேறு வேறு பகுதிகளிலும் பிற நாடுகளிலும் வாழ்பவர்களாவர். தென்னிந்திய மக்களில் ஆந்திர நாட்டு மக்களை ஆந்திரர் (Andhras) என ஐத்ரேய பிராமணத்தில் (Aitreya Brahmanas) குறிக்கப்பட்டுள்ளது. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த குமாரில பட்டர் (Kumārila - bhaṭṭa) என்பவர் தென்னிந்திய மொழிகளை ஆந்திர - திராவிட - பாஷா (Āndhra - Drāviḍa - bhāshā) என்று அழைத்துள்ளார். மஹாகர்னர் (Mahakarnas) என்றழைக்கப்பட்டவர்கள் காந்தாரத்திற்குக் (Gandhara) கிழக்கேயுள்ள பகுதிகளையும் மால்வா (Malva) என்றழைக்கப்பட்ட பகுதியையும் சுமார் 456 ஆண்டுகளாக ஆண்டு வந்த இனத்தவர்கள். இவர்கள் ஆந்திரர் இராஜவம்சத்தைச் (Andhra dynasty) சேர்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர் (கனகசபை, 1904:1-7). சங்க கால இலக்கியங்களில் காஞ்சிபுரம், பல்லவர்கள் பற்றிய குறிப்புகள் இல்லை. சாக பல்லவர்கள் (Saka-Pallavas) என்றழைக்கப்பட்டவர்கள் கி.பி. முதலாம் அல்லது இரண்டாம் நூற்றாண்டில் தங்கள் ஆட்சியை நிறுவினர். இவர்களில் ஒரு பிரிவினர் ஆந்திர மன்னர்களை வென்று தங்களின் ஆட்சியை ஆந்திராவில் நிறுவினர். இவர்கள் தங்களைச் சத்திரியர்கள் (kshariyas) என அழைத்துக் கொண்டதோடு மட்டுமல்லாது தங்களைப் பரத்வாஜ (Bharadvaja) கோத்திரத்தைச் சேர்ந்த பல்லவர்கள் எனப் பிரகடனம் செய்து கொண்டனர். காஞ்சிபுரத்தில் முதல் பல்லவ ஆட்சியைப் பாதப்பா (Badappa) என்பவர் நிறுவியதாகக் கருதப்படுகிறது. காஞ்சிபுரம் அந்தக் காலத்தில் சத்யவிரத சேத்திரம் (Satyavrata Kshetra) என்று அழைக்கப்பட்டது. பாகவதப் புராணத்தின் படி (Bhagavata Purana), திராவிட அல்லது காஞ்சியின் அரசரான சத்யவரத விவஷ்வன் (Satyavarata Vivasvan) மனுவின் மகனாவார். சந்திரகுப்த மௌரியரின் மந்திரியாக இருந்த சாணக்கியரின் காலத்திலிருந்து காஞ்சிபுரம் ஆரியக் கலாச்சாரத்தின் மையமாக விளங்கியுள்ளது. சாணக்கியர் ஒரு திராவிடர் அல்லது காஞ்சிபுரத்துக்காரர் என்றே கருதப்படுகின்றார். திராமிளர் என்பது இவருடைய வேறு பெயராகும். கி. பி. ஏழாம் நூற்றாண்டில் ஆரியக் கலாச்சாரத்தைப் பின்பற்றத் தொடங்கிய தமிழர்கள் திராவிடர் என அழைக்கப் பட்டதாகச் சீனிவாச ஐயங்கார் குறிப்பிடுகின்றார் (ஐயங்கார், 1929: 325 - 333).

சமண மதத்தின் 24வது தீர்த்தங்கரராகிய மகாவீரர் தென்னிந்தியாவுக்கு வருகை செய்துள்ளதிலிருந்து மிகப் பழங் காலத்திலிருந்தே சமண மதம் தென்னிந்தியாவில் ஒரு முக்கிய மதமாகத் திகழ்ந்துள்ளதை அறியலாம். இலங்கைப் புத்தமதத் துறவிகளின் வரலாற்றுக் கையேடாக விளங்கும் கி.பி. நான்காம் நூற்றாண்டைச் சேர்ந்த மகாவம்சம் (Mahavamsa), கி. மு. நான்காம் நூற்றாண்டிலிருந்தே தென்னிந்தியாவில் சமண மதம் ஒரு முக்கியமான மதமாகத் திகழ்ந்துள்ளது எனக் குறிப்பிடு கிறது (கல்கத்கி, 1990: 500). சமண மதப் புராணக் கதைகளின்படி, திராவிடர் முதல் சமண மதத் தீர்த்தங்கரராகிய ரிஷபதேவாவின் (Rishabha deva) மக்களுள் ஒருவராகவும், திராவிட வழித்தோன்றல் களின் முதல்வராகவும் கருதப்படுகின்றார். (நந்தகுமார், 1990: 535). கி.பி. ஐந்தாம் நூற்றாண்டில் வஜ்ரநந்தி (Vajranandi) எனும் சமண மத அறிஞர் திராவிட - கண (Dravida - gana) எனும் அமைப்பை மதுரையில் நிறுவினார். இது திராவிடர் சங்கம் (Dravida Sangha) என்பதை அடியொற்றிய அமைப்பாகும். திராவிட, திராமிள எனும் குறிப்புகள் பலவாறாகப் பற்பல மத இலக்கியங்களில் கூறப்பட்டிருப்பினும், திராவிடர்கள் என்பவர்கள் யார்? என்ற கேள்வி எழத்தான் செய்கிறது.

வரலாற்றின் இடைக்காலம் எனக் கருதப்படும் காலக் கட்டங்களில் (கி. பி. எட்டாம் நூற்றாண்டு முதல் 14ஆம் நூற்றாண்டு வரை) இந்தியத் துணைக்கண்டத்தில் வாழும் பிராமணர்கள் தங்களைப் பஞ்ச - திராவிடர்கள் (Pañca Drāviḍa), பஞ்சகௌடர்கள் (Pañca Gauḍa) என இரு பெரும் பிரிவுகளாகப் பிரித்துக் கொண்டனர் (பஞ்ச - 'ஐந்து'). இவர்களில் பஞ்ச திராவிடர்கள் என்பவர்கள் குஜராத், மகாராஷ்டிரம், கர்நாடகம், ஆந்திரம், திராவிடம் ஆகிய நாட்டினைச் சேர்ந்தவர்கள். இதில் திராவிடம் என்ற சொல் தற்போதைய தமிழ்நாடு, கேரளம் ஆகிய இரு மாநிலங்களையும் ஒன்றுசேரக் குறிக்கும். பஞ்ச - கௌடர்கள் என்பவர்கள் - கௌடா (Gauda), சாரஸ்வத (Sarasvata), கான்யகுப்ஜ (Kanya Kubja), உத்கல (Utkala), காஷ்மீரப் (Kasmira) பகுதிகளின் வாழும் அந்தணர்கள் ஆவார்கள். கௌடா என்பது தற்போதுள்ள வங்காளம், கிழக்கு உத்தரப்பிரதேசம் ஆகிய பகுதிகளில் வாழும் அந்தணர்களைக் குறிக்கும். பஞ்ச கௌட அந்தணர்கள் ஆரிய மொழிகள் பேசுபவர்களாகவும், பஞ்ச - திராவிட அந்தணர்கள் திராவிட மொழிகள் பேசுபவர்களாகவும் இருந்தாலும், குஜராத், மகாராஷ்டிரம் ஆகிய பகுதிகளில் வாழும் அந்தணர்கள் தங்களைப் பஞ்ச - திராவிடர்கள் என அழைத்துக்கொள்வது திராவிட மொழிகள் இந்தியத் துணைக்கண்டத்தின் மேற்கு, வடமேற்குப் பகுதி

களிலும் பரவலாகப் பேசப்பட்டதற்குச் சான்றாக விளங்குகிறது. இந்தியத் துணைக்கண்டத்தில் வாழும் அந்தணர்களின் பஞ்ச - திராவிடர், பஞ்ச - கௌடர் எனும் இரு பெரும் பிரிவுகள் கி.பி. முதல் நூற்றாண்டு முதலே இருந்திருக்க வேண்டும் என்பது சுனிதி குமார் சட்டர்ஜியின் கருத்தாகும் (சட்டர்ஜி, 1969: 3). எனவே திராவிடர் எனும் சொல்லும் அதன் பொருளும், தென் இந்திய மக்களைக் குறிக்கும் சொல்லாகச் சமஸ்கிருத, பிராமண (Brahmanic), சமண (Jain) இலக்கியங்களில் மிகப் பழமையான காலந் தொட்டுக் காணப்பட்டாலும், இச்சொல் தென் இந்தியாவில் வாழும் எல்லா மக்களையும் குறிக்கும் சொல்லாக விளங்குகிறதா? அல்லது ஆரியர்களின் கலாச்சார, பண்பாட்டுக் கூறுகளையும் ஆரிய, சமண மதங்களையும் தழுவி வாழும் தென் இந்திய மக்களை மட்டும் குறித்ததா? என்பது ஒரு கேள்விக் குறியாகும். காஞ்சிபுரப் பகுதிகளில் ஆரிய, சமண மதக் கொள்கைகளைப் பின்பற்றுபவர்களும், ஆரியப் பண்பாட்டுக் கூறுகளைப் பின்பற்று பவர்களுமாகிய தென் இந்திய மக்களை மட்டுமே திராவிடர்கள் எனும் சொல் முதலில் குறித்தது. பின்னர் படிப்படியாக மற்ற பகுதிகளில் வாழும் இத்தகைய மக்களையும் குறிக்கும் சொல்லாக மாற்றப்பட்டுள்ளது.

சங்ககாலத் தமிழகம் சேர, சோழ, பாண்டிய மன்னர் களால் ஆளப்பட்டு வந்த மூன்று பெரும் நாடுகள் மட்டு மல்லாது இவர்களின் ஆட்சிக்குட்பட்ட 12 சிற்றரசர்கள் ஆண்ட பகுதிகளாகவும் இருந்தது. இவ்வாறு 12 சிற்றரசர்கள் ஆண்ட நாடுகளைத் தமிழகத்தின் தென் பகுதியிலிருந்து கிழக்காக வரிசைப் படுத்தினால் அவற்றுள் கீழ்க்கண்ட நாடுகள் அடங்கும்: பொங்கர் நாடு, ஒளிநாடு, தென்பாண்டி நாடு, குட்ட நாடு, குட நாடு, பன்றி நாடு, கற்கா நாடு, சீத நாடு, பூழி நாடு, மலை நாடு, அருவா நாடு, அருவா வடதலை நாடு. இவைகளில் அருவா நாடும் அருவா வடதலை நாடும் பிற்காலத்தில் தொண்டை மண்டலம் என அழைக்கப்பட்டன. இப்பகுதியின் தலைநகர் காஞ்சியாக விளங்கியது. எனவே இப்பகுதி திராவிடர்கள் வாழும் பகுதியாகக் கருதப்பட்டது (ஐயங்கர், 1929: 100). வேங்கட மலைக்கு அப்பால் வாழ்ந்த தெலுங்கு பேசும் மக்கள் வட திசையில் வாழ்பவர்கள் எனும் பொருளில் வடுகர்கள் என அழைக்கப்பட்டனர். இவர்கள் தமிழர்களை அருவாளர் அல்லது அரவாளர் என்றும் தமிழ் மொழியை அரவம் என்றும் அழைத்தனர். சிலப்பதிகாரத்தில் கொங்கிளம் கோசர் எனும் குறிப்பு காணப்படுகிறது. இவர்கள் துளு மொழி பேசும் மக்களாவர். வேங்கடத்தின் வடக்குப் பக்கத்தில் மேற்குத் தொடர்ச்சி மலைப் பகுதிகளை உள்ளடக்கிய நாடு எருமை நாடு

என்றழைக்கப்பட்டது. இந்நாட்டின் மேற்குப் பகுதிகளில் துளு நாடு, குடகம் (தற்போதைய குடகு நாடு), கொங்கிளம் ஆகிய நாடுகள் இருந்தன. (கனகசபை, 1904: 10). எனவே தென்னிந்திய மொழிகளாகக் கருதப்படும் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய நான்கு மொழிகள் தவிர துளு, குடகு ஆகிய மொழிகளைப் பற்றிய குறிப்புகளும் தமிழ் இலக்கியங்களில் காணக் கிடக்கின்றன. தொல்காப்பியர் தமிழ் மொழியின் சொற்களை இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வட சொல் என நான்கு வகைகளாகப் பிரித்துக் காட்டுகின்றார். இவற்றில் திசைச்சொல் என்பது தமிழத்தின் சிற்றரசர்களால் ஆளப்பட்டு வந்த 12 நாடுகள் மட்டுமல்லாது தமிழகத்தின் புறப்பகுதிகளில் உள்ள 17 வகை நாடுகளிலிருந்தும் வந்து வழங்கப்படுகிறது. நன்னூலுக்கு உரை எழுதிய மயிலைநாதர் இந்த 17 நாடுகளைச் சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கடவம், குசலம் எனப் பட்டிய லிட்டுள்ளார். இவற்றில் அருமணம், காம்போசம், ஈழம், கூவகம், பஃளவம், அங்கம் போன்ற பெயர்கள் மேற்கூறிய 17 வகை நாடுகள் சிலவற்றின் மாற்றுப் பெயர் களாகும். இவற்றுள் துளுவம், குடகம், கன்னடம், தெலுங்கம் போன்ற பெயர்கள் துளு, குடகு, கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகள் பேசப்படும் பகுதிகளாகத் தமிழ் இலக்கியங்களில் கூறப்படுகின்றன. (இராகவையங்கர், 1941: 16 - 18).

## மொழிக்குடும்பங்களும் இனப்பாகுபாடுகளும்

ரிஸ்லே (Risley) (1915: 32-34) இந்திய மக்களை உடலமைப்புக் கூறுகளின் அடிப்படையில் எட்டு வகைகளாகப் பிரித்துள்ளார்: துர்கோ-ஈரானியன் (Turko-Iranian), இந்தோ-ஆரியன் (Indo-Aryan), சித்தோ-திராவிடன் (Scytho- Dravidian), மங்கோலிய - திராவிடன் (Mangolo-Dravidian), மங்கலாய்டு (Mangoloid), திராவிடன் (Dravidian), நீக்ரிடோ (Negrito), முண்டா (Munda). ஒரான் (Oraon), முண்டா (Munda) பழங்குடியினர் களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது இருபழங்குடி மக்களும் முறையே குடுக் (Kurukh), முண்டாரி (Mundari) ஆகிய இரு மொழிக்குடும்பங்களைச் (திராவிடம், ஆஸ்த்ரோ - ஆசியாடிக்) சேர்ந்த வேறு வேறு மொழிகளைப் பேசினாலும் உடற்கூறு அமைப்பால் ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள் எனக் கூறுகின்றார் (1915:12). இவர் கொடுத்துள்ள எட்டுவகைப் பிரிவுகளுள் திராவிடர், இந்தோ - ஆரியர், மங்கோலியர், நீக்ரிட்டோ எனும் பிரிவுகள் இனப்பிரிவுகளுள் தனித்தன்மை கொண்ட பிரிவுகளாகும். இதர நான்கு பிரிவுகளும் இரு வேறு பிரிவுகளின் உடற்கூறுகளைக் கொண்டதாகும். சர்க்கார் (Sarkar - 1961) இந்திய மக்களைக் கீழ்க்கண்ட ஆறு பிரிவுகளாகப் பிரிக்கின்றார்: ஆஸ்ட்ரலாய்டு (Austroloid), இந்தோ-ஆரியன் (Indo-Aryan), ஈரானோ - சித்தியன் (Irano-Scythian), முண்டாரி மொழிகள் பேசும் மக்கள் (Mundari-speaking), மலாய்-பாலினேசியன் (Malayo- Polynesian), மங்கலாய்டு (Mongoloid). மல்கோத்ரா (Malhotra, 1978) இந்திய மக்களை நீக்ரிட்டோ (Negrito), நிஷாடா அல்லது ஆஸ்ட்ரலாய்டு (Nishadas or Austroloids), மங்கலாய்டு (Mangoloids), ஈரோப்பாய்டு அல்லது காகசாய்டு (Europoids or Caucasoids) என்ற நான்கு பிரிவுகளாகப் பிரிக்கின்றார். இவ் இனப்பாகுபாடுகள் முழுமையாகக் கலப்படமே இல்லாத தனித் தன்மையுடைய இனங்கள் என்று கூற முடியாது என்கின்றார் மல்கோத்ரா (1978:46).[12] உடல்கூறு மானிடவியலாளர்கள் (Physical Anthropologists) மொழியின் அடிப்படையில் பிரிக்கப் படும் மக்களின் பிரிவுகளும் உடல்கூறு அடிப்படையில் பிரிக்கப்படும் மக்களின் பிரிவுகளும் ஒன்றுக்கொன்று மாறுபட்டவைகளாகும் என்பதில் உறுதியுடன் இருக்கின்றனர். மேலும், இந்தியமக்களைப் பல இனங்களாக உடற்கூறுகளின் அடிப்படையில் பிரித்தாலும் இந்தியத் துணைக்கண்டப் பரப்பளவில் ஓர் இனத்தின் இனக் கூறுகள் எந்த வட்டாரத்தின் எந்த இடத்தில் ஆரம்பித்து எந்த வட்டாரத்தின் எந்த இடத்தில் முடிவடைகின்றன என்று

கோடிட்டுக் காட்ட முடியாது. ஓர் இனப்பாகுபாட்டின் முடிவும் வேறோர் இனப்பாகுபாட்டின் ஆரம்பமும் பிரித்துப் பார்க்க முடியாதபடி உள்ளன என்கின்றார் ரிஸ்லே (Risley, *1915:34*).[13] இக்கூற்று மொழிகளுக்கும் பொருந்துவதாக உள்ளது (கிரியர்சன் - Grierson, *1927: 30-32*).[14]

இந்திய நாட்டில் பேசப்படும் மொழிகளையும் அம் மொழிகளைப் பேசும் மக்களின் உடற்கூறுகளையும் கருத்தில் கொண்டு மொழிக்குடும்பங்கள் வாரியாக மக்களைக் கீழ்க் கண்டவாறாகப் பிரிக்கலாம்:

| | | |
|---|---|---|
| 1. | அந்தமான் மொழிக்குடும்பம் (Andaman Language Family) | - நீக்ரிட்டோ (Negrito) இனத்தவர்கள் |
| 2. | இந்தோ-ஆரிய மொழிக்குடும்பம் (Indo-Aryan Language Family) | - ஈரோப்பாய்டு அல்லது காகசாய்டு (Europoids or Caucasoids) இனத்தவர்கள். |
| 3. | ஆஸ்ட்ரோ - ஆசியாடிக் (Austro - Asiatic) மொழிக்குடும்பம் | - ஆஸ்ட்ரலாய்டு (Australoids) இனத்தவர்கள். |
| 4. | திராவிட மொழிக்குடும்பம் (Dravidian Language Family) | - நீக்ரிட்டோ (Negritos), ஆஸ்ட்ரலாய்டு(Australoids), ஈரோப்பாய்டு அல்லது காகசாய்டு (Europoids or Caucasoids)இனத்தவர்கள் |
| 5. | திபெத்தோ - பர்மன் மொழிக்குடும்பம் (Tibeto - Burman Language Family) | - மங்கலாய்டு (Mongoloids) இனத்தவர்கள் |

மேற்கூறிய உடற்கூறு, மொழி பிரிவமைப்புகளை நோக்குங்கால் திராவிட மொழிகள் பேசும் மக்கள் பல வகைகளான இனக் கூறுகளுடன் விளங்குவதால் அவர்கள் இந்திய வரலாற்றின் பல காலக்கட்டங்களில் பல இனத்தவர்களின் கலப்புக்கு ஆட்கொள்ளப் பட்டிருப்பது தெளிவாகிறது. மங்கலாய்டு இனக் கூறுகள் தவிரப் பிற இனக்கூறுகள் திராவிட மொழிகள் பேசும் மக்களிடம் காணப்படுவதால் மங்கலாய்டு இனத்தைச் சேர்ந்த மக்கள் இந்தியத் துணைக்கண்டத்திற்குள் பிற இன மக்கள் குடியேறிய பின்பு கடைசியாகக் குடியேறியிருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. மேலும் மங்கோலிய இனத்தைச் சேர்ந்த திபெத்தோ - பர்மன் மொழிகளைப் பேசும் பழங்குடிகள் இந்தியத் துணைக் கண்டத்தின் வட எல்லையாகிய இமாலயத்திலும் அதன் அடிவாரப் பகுதிகளில் மேற்கிலிருந்து கிழக்காகப் பரவியிருப்பதால்

அவர்கள் இந்தியத் துணைக் கண்டதிற்குள் வருமுன் திராவிட மொழிகள் பேசும் மக்கள் வட திசையிலிருந்து தெற்கு நோக்கித் தள்ளப்பட்டு விட்டனர் என்பதும் புலப்படுகிறது. மத்திய இந்தியப் (Central India) பகுதிகளில் வாழும் பழங்குடி மக்களிடம் இவ்வகை இனக் கலப்புகள் அதிகமாகக் காணப்படுவதாக அறிஞர்கள் கருதுகின்றனர். பைகா (Baiga), புய்யா (Bhuiya), கோலாம் (Kolam), நகால் (Nahal), பீல் (Bhil) பழங்குடியினர்கள் இதற்கு உதாரணமாகத் திகழ்கின்றனர். உடற்கூறு ஆய்வுகளின் அடிப்படையில் பைகா, புய்யா போன்ற பழங்குடியினர்கள் மொழி உட்பட மாறுபட்ட ஒரு பண்பாட்டிற்குத் தங்களின் பூர்வீகத் தாய்மொழியிலிருந்து (Proto mother tongue or language) ஒரு முறை மாறுதலைக் கொண்டுள்ளனர். ஆனால் கோலாம், நகால் போன்ற பழங்குடியினர் இத்தகைய மாற்றங்களை இரண்டு முறை கொண்டுள்ளனர். பீல் பழங்குடியினரோ இத்தகைய மாற்றங்களைப் பலமுறை சந்தித்துள்ளனர் (இரக்சித், Rakshit - 1980: 109 - 110). பீல் பழங்குடியினர்களின் பெயர் திராவிட மொழிச் சொல்லான 'வில்-' என்ற சொல்லிலிருந்தும் பீல் பழங்குடியினரைச் சார்ந்த மீனா (Mina or Meena) எனும் பழங்குடியினரின் பெயர் திராவிடச் சொல்லான 'மீன்' என்ற சொல்லிலிருந்தும் உருவான சொற்கள் என்பது சொல் ஆய்வாளர்களின் (Etymologist) கருத்தாகும் (மனோகரன், 1986).

## மத்தியகால இலக்கியங்களில் திராவிட மொழிகள்

இந்தியத் துணைக்கண்டத்தில் பேசப்படும் மொழிகளைப் பற்றிக் குறிப்பிடும் அல்பிருனி (Albiruni, 1030 A.D) சமஸ்கிருத மொழியை மட்டும் குறிப்பிடுகின்றார். அவருடைய காலத்திலேயே சமஸ்கிருதம் பேச்சுவழக்கில் இல்லாது எழுத்து வழக்கில் மட்டும் உள்ள மொழியாகிவிட்டது. மேலும் இந்திய மொழிகள் என்பவை பொதுவான மக்களால் பேசப்படும் ஒதுக்கப்பட்ட பொதுநிலை மொழிகளாகவும் மேல் மக்களாலும் கற்றவர்களாலும் பேசப்படும் செம்மையான மொழிகளாகவும் இரண்டு நிலைகளில் உள்ளன எனக் குறிப்பிட்டுள்ளார் (கிரியர்சன், *1927:1*). இந்தியத் துணைக்கண்ட வரலாற்றின் மத்திய காலக் கட்டங்களில் (medieval period) எழுதப்பட்ட இலக்கியங்களுள் அமிர் குஷ்ருவின் (Amir Khusrau, 1317 A.D) இலக்கியங்களில் தென் இந்தியாவில் பேசப்படும் மூன்று மொழிகளைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. அவை தூர் சமுந்தர் (Dhur Samundar - Kanarese of Mysore), திலங் (தெலுங்கு), மலபார் (Malabar - Tamil of the Coromandal Coast). மலபார் என்ற சொல் தமிழ் மொழியையும் அதைச் சார்ந்த மலையாள மொழியையும் குறிக்கிறது. அபுல் பஷ்ல் (Abul Fazl) அவருடைய அய்னி அக்பரியில் (Ain-i-Akbari) கீழ்க்கண்ட இரு திராவிட மொழிகளை மட்டும் குறிப்பிட்டுள்ளார்: தெலிங்கானா (Telingana - Telegu), கர்னாடிக் (Karnatik - Kanarese) (கிரியர்சன், Vol. 1:1).

# தற்கால ஆய்வுகளின் தொடக்கம்

முதன் முறையாக இந்திய மொழிகளை ஒப்பாய்வு செய்த இவரஸ் அபெல் (Iwerus Abel) கீழ்க்கண்ட எட்டு மொழிகளிலிருந்து 53 சொற்களைச் சேகரித்து ஆய்வுக்குட்படுத்தினார்: தெலுங்கு, சமஸ்கிருதம், மராட்டி, கன்னடம், இந்துஸ்தானி, கொங்கனி, குஜராத்தி, பர்மிஸ், இவ் எட்டு மொழிகளில் தெலுங்கு, கன்னடம் ஆகிய இரண்டும் திராவிட மொழிகள். அதேபோல் முதன் முதலாக 1816இல் இந்தியாவில் பேசப்படும் மொழிகளைப் பற்றிய விவரங்களைச் சேகரிக்க முயன்ற கரே (W. Carey), மாஷ்மேன் (J. Mashman), வார்டு (W. Ward) ஆகியவர்களின் பட்டியலிலும் திராவிட மொழிகளில் தெலுங்கும் கன்னடமும் மட்டுமே இடம்பெற்றிருந்தன. மொழிகளின் ஒப்பாய்வுகளைக் கிறித்தவ மதக் கடவுள் வழிபாட்டை (Lord's Prayer) மொழிபெயர்ப்பு செய்யப்பட்டுள்ள மொழிகளின் சொற்களைக் கடவுள் வழிபாட்டில் கண்டுள்ள சொற்கள் மூலம் ஒப்பாய்வு செய்த ஜோகன் பிரியெட்ரிச் பிரிட்ஷ் (Johann Friedrich Fritz, 1748) என்பவர் அவருடைய ஆய்வில் இந்திய மொழிகளில் தமிழ், தெலுங்கு, கன்னடம் ஆகிய மூன்று திராவிட மொழிகளைச் சேர்த்துள்ளார். திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளை மேற்கத்திய மொழி அறிஞர்கள் முதலில் "தமுழியன் (Tamulian)" அல்லது "தமுழிக் (Tamulic)" என்றே அழைத்துள்ளனர். திராவிட மொழிக் குடும்பத்தில் திராவிட மொழிக்கூறுகளை முழுவதுமாகத் தன்னகத்தே கொண்டு பிற ஆரிய மொழிகளோடு ஒப்பிட்டுப் பார்ப்பதற்குத் தமிழின் பழமையும் செழுமையும் காரணங்களாக அமைவதால் தமிழ் மொழியின் பெயரோடு பிற திராவிட மொழிகளை இணைத்துப் பார்த்ததோடு திராவிட மொழிக்குடும்பத்தை அடையாளமும் கண்டுள்ளனர். பம்பாய் உயர்நீதிமன்றத்தில் தலைமை நீதிபதியாக இருந்த சர் தாமஸ் எர்ஸ்கின் பெர்ரி (Sir Thomas Erskin Perry) இராயல் ஆசியாடிக் சங்கத்தின் பம்பாய்ப் பிரிவு (Royal Asiatic Society, Bombay Branch) வெளியிடும் இதழில் வெளியிட்ட 'On the Geographical Distribution of the Principal Languages of India' எனும் ஆய்வுக் கட்டுரையில் இந்தியாவில் பேசப்படும் மொழிகளை இந்தியத் துணைக்கண்டத்திற்குள் ஊடுருவிய ஆரியர்களின் சமஸ்கிருத மொழி, தென்னிந்தியாவில் . பேசப்படும் வளர்ச்சியடைந்த மொழியான தமிழ் எனும் இரு பெரும்

பிரிவுகளாகப் பிரித்துக் காட்டினார். ஆனால் அவர் தென்னிந்திய மொழிகளைத் துரானியன் (Turanian) அல்லது தமிலாய்டு (Tamiloid) எனப் பெயரிட்டுள்ளார். இவரது ஆய்வில் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய நான்கு இலக்கிய மொழிகள் தவிர துளு (Tulu), கோண்டி (Gondi) ஆகிய மொழிகளும் இடம்பெற்றன. இவ் ஆறு மொழிகளைப் பற்றிய குறிப்புகள் மட்டுமல்லாது அம்மொழிகளைப் பேசும் மக்கள் வாழும் பகுதிகளைப் பற்றியும் தமது கட்டுரையில் தெளிவாகக் குறிப்பிட்டிருந்தார். இவர் தயாரித்த மொழிகள் குறித்த வரைபடத்தில் (map) தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு, கோண்டி ஆகிய ஆறு திராவிட மொழிகள் இடம்பெற்றன. ஆனால் கோண்டி மொழியை ஒரு கேள்விக் குறியுடன் திராவிட மொழியாகச் சேர்த்திருந்தார்.

முதன்முதலாக இந்தியாவில் பேசப்படும் மொழிகளை ஒரு மொழிக்குடும்பத்தின் கீழ்க் கொண்டு வர முடியும் என்பதைச் சர் வில்லியம் ஜோன்ஸ் (Sir William Jones) 1786ஆம் ஆண்டு இந்திய மொழியாகிய சமஸ்கிருதத்தை இலத்தீன் (Latin), கிரேக்கம் (Greek) ஆகிய மொழிகளோடு ஒப்பாய்வு செய்து சமஸ்கிருதம், இலத்தீன், கிரேக்கம் ஆகிய மொழிகள் அனைத்தும் ஒரே மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழிகள் என்பதை நிரூபித்தார். இந்தியாவில் பேசப்படும் அனைத்து மொழிகளும் சமஸ்கிருத மொழியிலிருந்து தோன்றிய மொழிகள் என்ற ஒரு தவறான கருத்து நிலவியிருந்த காலக்கட்டத்தில் 1816ஆம் ஆண்டு பிரான்சிஸ் ஒய்ட் எல்லீஸ் (Francis Whyte Ellis) சர் தாமஸ் எர்ஸ்கின் பெர்ரியின் (Sir Thomas Erskin Perry) கூற்றை உறுதிப்படுத்தித் தென்னிந்திய மொழிகள் சமஸ்கிருதத்திலிருந்து தோன்றிய மொழிகள் இல்லை என்ற கருத்தை நிலைநாட்டினார். தென்னிந்தியப் பேச்சு மொழிகள் (Dialects of South India) என்று அவர் அழைத்த மொழிகளில் தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம், துளு, குடகு, மால்தோ (Malto) ஆகிய ஏழு மொழிகள் அடங்கும். இவைகளில் மால்தோ மேற்குவங்கத்தில் வாழும் பழங்குடியினர்களால் பேசப்படும் ஒரு திராவிட மொழியாகும். இதர மொழிகள் அனைத்தும் தென்னிந்தியாவில் பேசப்படும் மொழிகளாகும். முதன்முதலில் இவர் கேம்பெல் (A.D. Campbell) எழுதிய தெலுங்கு மொழி இலக்கணம் (A Grammar of the Teloogoo Language, commonly termed the Gentoo, peculiar to the Hindoos inhabiting the North - Eastern provinces of the Indian Peninsula) எனும் நூலுக்கு எழுதிய முன்னுரையின் குறிப்பில் இக்கருத்தை தெளிவுபடக்கூறியுள்ளார். இவருடைய குறிப்புகள் பின்னர் என். வெங்கடராவ் (N. Venkata Rao) என்பவரால் சென்னைப் பல்கலைக்கழகம் வெளியிட்ட

அன்னல்ஸ் ஆப் ஓரியண்டல் ரிசர்ச் (Annals of Oriental Research, *1954-55, 12:1-35*) இதழில் வெளியிடப்பட்டுள்ளது.

அட்சன் (B.H. Hodson) முதன்முதலில் "திராவிடர்" என்ற சொல்லை ஆரியர்கள் அல்லாத பிற மக்களையும் அவர்களது மொழி, பண்பாட்டுக்கூறுகளையும் குறிக்கும் வகையில் பயன்படுத்தினார். திராவிட மொழிகள் பேசும் மக்களையும் அவர்களது மொழிகளையும் முண்டா மொழிப்பிரிவைச் சேர்ந்த மொழிகளையும் அம்மொழிகளைப் பேசும் மக்களைக் குறிக்கும் சொல்லாகத் திராவிடர் எனும் சொல் விளங்கியது. கி. பி. *1854*இல் மாக்ஸ் முல்லர் (Max Muller) முண்டா மொழிக் குடும்பத்தை நிறுவினார். முண்டாரி (Mundari), சந்தாலி (Santali), ஹோ (Ho), ஜீவாங் (Juang), பரங்கி (Parengi), போண்டொ (Bondo) போன்ற மொழிகளை உள்ளடக்கி முண்டா மொழிக்குடும்பம் ஆஸ்ட்ரோ - ஆசியாடிக் மொழிக்குடும்பத்தின் (Austro - Asiatic Language Family) துணைக்குடும்பமாகக் (subfamily) கருதப்படுவதுடன் இது மேற்கு ஆஸ்ட்ரோ - ஆசியாடிக் மொழிக்குடும்பம் (Western Austro - Asiatic Family) என்றும் அழைக்கப்படுகிறது. இப்பொழுது ஆரிய மொழிகள், முண்டா மொழிகள் என்னும் மொழிக்குடும்பங்கள் நிறுவப்பட்டு விட்டதால் 1856இல் பிஷப் கால்டுவெல்லுக்குத் (Bishop Caldwell) "திராவிடர்" எனும் சொல்லைப் பயன்படுத்தி எஞ்சிய மொழிகளைத் "திராவிட மொழிக்குடும்பம்" என அழைப்பதற்கு எந்தவிதத் தடையுமில்லாமல் போய்விட்டது.

இராபர்ட் கால்டுவெல் (Robert Caldwell) திராவிட மொழிகளின் தந்தை என அழைக்கப்படுகின்றார். திராவிட எனும் சொல் அச்சொல்லின் பெயரடையாகப் (adjective) பயன்படுத்தியதாகக் கால்டுவெல் (*1856: 4*)[15] குறிப்பிடுகின்றார். விந்திய மலைப்பகுதியிலிருந்தும் நர்மதா ஆற்றிலிருந்தும் குமரி வரை உள்ள பகுதிகள் ஒரே மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த பல மொழிகளைப் பேசும் பல பிரிவு மக்களைப் பழங்காலந் தொட்டே கொண்ட பகுதிகளாகும். இம்மொழிகளையே திராவிட மொழிகள் என்கின்றோம். இம்மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த பிற மொழிகளைப் பேசும் மக்களை வங்கத்தில் உள்ள இராஜ்மகால் (Rajmahal) மலைப்பகுதிகளிலும், பலுச்சிஸ்தான் (Baluchistan) மலைப்பகுதிகளிலும் காண முடிகிறது என்கின்றார் கால்டுவெல் (*1856: 1-2*)[16]. கால்டுவெல் திராவிட மொழிக் குடும்பத்தில் கீழ்க்கண்ட 12 மொழிகளைச் சேர்த்திருந்தார்: இராஜ்மகால் (Rajmahal), ஒரான் (Oraon), கன்னடம், குடகு

அல்லது கூர்க் (Kudagu or Coorg), கோட்டா (Kōṭa), கோண்டி (Gōṇḍi), கோந்த் அல்லது கூ (Khond or Ku), தமிழ், துளு (Tulu), தூடா (Tuda), தெலுங்கு, மலையாளம். பிராஹீய் (Brahui) மொழியைப் பற்றி அவர் அறிந்திருந்ததோடு அதன் இலக்கணக் குறிப்புகளைத் தம் நூலில் ஆங்காங்கே சில இடங்களில் எடுத்துக் காட்டுகளாகக் குறிப்பிட்டாலும் போதுமான அளவுக்கு இலக்கண ஆதாரங்கள் வேண்டும் என்ற காரணத்திற்காக அதை அவர் திராவிட மொழிக்குடும்பத்தோடு சேர்க்கவில்லை. பின்னர் 1909இல் டேனிஸ் பிரே (Denys Bray) எனும் மொழி அறிஞர் பிராஹீய் மொழியைத் தெளிவாக ஆராய்ந்து அந்த மொழி திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழி என்று நிறுவியுள்ளார். இராஜ்மகால் என்று கால்டுவெல் குறிப்பிட்டது இராஜ்மகால் மலைப்பகுதியில் வாழும் மாலேர் (Maler), மால் பகாடியா (Mal Paharia), சௌரியா பகாடியா (Sauria Paharia) எனும் பழங்குடி மக்கள் பேசும் மால்தோ (Malto) மொழியாகும். இராபர்ட் கால்டுவெல் (1856) தம்முடைய நூலுக்குத் திராவிட அல்லது தென் இந்திய மொழிக் குடும்பத்தின் ஒப்பிலக்கணம் (A Comparative Grammar of the Dravidian or South - Indian Family of Languages) என்று பெயரிட்டுத் திராவிட மொழிகள் என்றாலே தென் இந்திய மொழிகள் என முன்மொழிந்துள்ளார். அவர் தம்முடைய நூலில் (1856:6) திராவிட மொழிகளாகக் கருதப்பட்ட 12 மொழிகளையும் பண்படுத்தப்பட்ட மொழிகள் (cultivated languages), பண்படுத்தப்படாத மொழிகள் (uncultivated languages) என இரண்டு வகைகளாகப் பிரித்துள்ளார்:

1. பண்படுத்தப்பட்ட மொழிகள்: தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம், துளு, குடகு அல்லது கூர்க் ஆகிய ஆறு மொழிகளாகும்.

2. பண்படுத்தப்படாத மொழிகள்: தூடா (தோடா), கோட்டா, கோண்ட் (Gond), கோந்த் அல்லது கூ (Gond or Coo), ஒரான் (Oraon), இராஜ்மஹால் (Rajmahal) ஆகிய ஆறு மொழிகளாகும்.

இவற்றில் தோடா, கோட்டா என்பன மொழிகளின் பெயர்களாகவும் மொழிகள் பேசும் பழங்குடி இனப்பெயர் களாகவும் வருவன. கோண்ட் என்பது பழங்குடி இனப் பெயராகவும், அவர்களது மொழி கோண்டி (Gondi) எனவும் அழைக்கப்படுகின்றன. அதுபோல் ஒரான் என்பதும் பழங்குடி இனப் பெயராகும். அவர்களது மொழி குடுக் (Kurukh) என அழைக்கப்படுகிறது. இராஜ்மஹால் என்பது மேற்கு வங்கத்தில்

உள்ள ஒரு மலைப்பிரதேசத்தின் பெயராகும். இங்கு வாழும் மாலேர் (Maler), மால் பஹாடியா (Mal Paharia), சௌரிய பஹாடியா (Sauria Paharia) எனும் பழங்குடி மக்கள் பேசும் மொழி மால்தோ (Malto) என அழைக்கப்படுகிறது. இந்த மொழியையே கால்டுவெல் அந்த மலைப்பிரதேசத்தின் பெயரால் இராஜ் மஹால் என அழைத்துள்ளார். மேலும் இராபர்ட் கால்டுவெல் தம் ஆய்வில் திராவிட மொழிகளாகக் கருதப்படும் மொழிகளை ஒன்றோடு ஒன்றின் இலக்கணக் கூறுகளையும் (grammatical), ஒலியன் (phonological), உருபன் (morphological) கூறுகளையும் அடிப்படையாகக் கொண்டு ஒப்பிட்டுப் பார்த்துள்ளார். ஆனால் அம்மொழிகளின் மரபுவழித் தோற்றம் பற்றியும் தொடர்புகள் பற்றியும் (origin and genetical relation), எந்த மொழியிலிருந்து எந்த மொழி பிரிந்தது என்பன பற்றியும் விரிவான ஆய்வை அவர் மேற்கொள்ளவில்லை.

## இந்திய மொழிகள் அளவாய்வில் திராவிட மொழிகள்

சர் ஜார்ஜ் ஆபிரகாம் கிரியர்சன் (Sir George Abraham Grierson) இந்திய அரசுப் பணியில் 1873ஆம் ஆண்டு சேர்ந்தார். இந்தியாவில் பேசப்படும் மொழிகளைப் பற்றிய ஓர் அளவாய்வு (Survey) நடத்துவதற்கு அரசு முடிவு எடுத்த பின்னர் அவர் அந்தத் திட்டப்பணியின் மேற்பார்வையாளராக நியமிக்கப் பட்டார். இந்திய மொழி அளவாய்வுத் திட்டம் (Linguistic Survey of India Project) 1898ஆம் ஆண்டு துவங்கியது. அத் திட்டத்தின் இறுதித் தொகுதி 1927ஆம் ஆண்டு வெளிவந்தது. திட்டக்கால ஆரம்பம் முதல் இறுதித் தொகுதி வெளிவரும் வரை கிரியர்சனே இத்திட்டத்தின் மேற்பார்வையாளராகவும் பதிப்பாசிரியராகவும் 29 ஆண்டுகள் தொடர்ந்து பணியில் இருந்தது இத்திட்டத்தின் சிறப்புக்கூறாகக் கருதப்படுகிறது. அவர் ஒருவரே தொடர்ந்து இப்பணியை மேற்கொண்டதால் அனைத்து மொழிகளைப் பற்றிய தகவல்களைச் சேகரித்து அவைகளை ஒழுங்குபடுத்தி மொழிகள் (languages), கிளை மொழிகள் (dialects) ஆகியவைகளை அடையாளங்கண்டு மொழிக்குடும்பம் (Language Family) வாரியாகத் தொகுதிகளை வெளியிட்டதன் மூலம் அவரால் ஒரு மகத்தான சாதனை புரிய முடிந்தது. இத்திட்டத்தின் மிகப் பெரிய பின்னடைவு என்ன வென்றால் தென்இந்தியாவின் பெரும் பகுதிகள் (சென்னை, மைசூர், ஐதராபாத்) இத்திட்டத்தில் சேர்க்கப்படவில்லை. எனவே தென்னிந்தியாவில் பேசப்படும் பழங்குடியினர்களின் பேச்சு வழக்குகளும் மொழிகளும் பற்றிய தகவல்களை மொழிகளின் தரவுகள் அடிப்படையில் கிரியர்சனால் முழுவதுமாகக் கொடுக்க முடியவில்லை. ஆனால் அவர் இம்மொழிகளுக்கு 1891ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு விவரங்களை இணைத்துள்ளார்.[17]

மொழிவாரியாகக் கிடைத்த தகவல்களின் அடிப்படையில் கிரியர்சன் முதலில் பேச்சுவழக்குத் தகவல்களை மொழி (language) அல்லது ஒரு மொழியின் கிளைமொழி (dialect) என்று தீர்மானித்து அதன் அடிப்படையில் இந்தியாவில் 179 மொழிகள், 544 கிளைமொழிகள் பேசப்படுகின்றன என்று மொழிகளின் தரவுகளுடனும் எடுத்துக்காட்டுகளுடனும்

கூறியுள்ளார். ஆனால் பிற்சேர்க்கையில் (Appendix I) 872 மொழி, கிளைமொழிப் பெயர்கள் பட்டியலிடப்பட்டுள்ளன (தொகுதி I, பகுதி I: 390 - 410). திராவிட மொழிகள் அல்லது கிளை மொழிகளின் பெயர்களாக 46 பெயர்கள் வந்துள்ளன. தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம், கோலாமி, கோண்டி ஆகிய மொழிகளுக்கு மொழி, கிளைமொழிகள் பேசும் மக்களின் ஒட்டு மொத்த மக்கள்தொகையும், ஒவ்வொரு கிளை மொழிகளைப் பேசும் மக்கள்தொகையும் தனித்தனியே கொடுக்கப்பட்டுள்ளன. ஒட்டுமொத்தமாக 46 மொழிகள், கிளைமொழிகளின் பெயர்கள் குறிக்கப்பட்டு இருந்தாலும், பிற்சேர்க்கையில் 40 பெயர்கள் மட்டும் (தொகுதி I, பகுதி I: 397 - 398) பட்டியலிடப் பட்டுள்ளன.

கிரியர்சன் இந்தியாவில் பேசப்படும் திராவிட மொழிகள் 16 என்றும், அவைகளின் கிளைமொழிகள் 23 என்றும் மொத்தம் 39 என்று கணக்கிட்டுள்ளார். பாஷிம் பீலி (Bhili of Basim) என்று கோலாமி மொழியின் கிளை மொழியாகக் கொடுக்கப்பட்டிருப்பது பின்னர் நீக்கப்பட்டதன் காரணமாகத் திராவிடமொழி, கிளைமொழிப் பெயர்கள் நாற்பதிலிருந்து 39ஆகக் குறைந்துள்ளன. 1921ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு கிரியர்சனின் இந்திய மொழி அளவாய்வுத் திட்டத்தின் கடைசிக் காலக்கட்டங்களில் நடத்தப்பட்டதாகும். இதிலும் இந்தியாவில் பேசப்படும் திராவிட மொழிகளின் எண்ணிக்கை 16 என்றே குறிப்பிடப் பட்டுள்ளது.

இந்திய மொழி அளவாய்வு தொகுதி நான்கில் கீழ்க்கண்ட திராவிட மொழிகளைப் பற்றிய செய்திகள் கொடுக்கப்பட்டுள்ளன. அவை மொழி, கிளைமொழி எனப் பாகுபடுத்தப்பட்டு ஒவ்வொரு மொழியின் கிளைமொழிகளும் அம்மொழியோடு பட்டியலிடப்பட்டுள்ளன: கந்தி அல்லது கோந்த் (Khandi or Khōnd: கோலாமி - Kōlāmi, பாஷிம் பீலி - Bhili of Basim, நாய்கி - Naikī), கன்னடம் (Kanarese: படகா - Badaga, குறும்பா அல்லது குறும்வாடி - Kurumba or Kurumvārī, கோலாரி அல்லது ஹோலியா - Gōlarī or Hōliyā), குடகு அல்லது கூர்கி (Kudagu or Coorgi), குடுக் அல்லது ஒரான் (Kurukh or Orāōn), கூய் (Kui), கோட்டா (Kōṭa), கோண்டி (Gōṇḍī: கட்டு - Gaṭṭu, கோய் - Kōī, மாடியா - Māṛiā, பட்ஜி - Parjī), தமிழ் (கொரவா - Korava, எருக்கலா - Yerukala, இருளா - Iruḷa, கசுவா Kasuva, கைகடி - Kaikāḍī, பர்கண்டி - Burgaṇḍī), துளு (Tuḷu), தெலுங்கு (கோம்டாவ் - Kōmṭāū, சாலவாடி - Sālewārī, கோலாரி - Gōlarī, பேராடி - Berāḍi,

வதாடி - Vaḍārī, காமாடி - Kāmāṭhī), தோடா (Toda), மலையாளம் (Malayāḷam: எரவா - Yerava), மால்தோ அல்லது மாலேர் (Malto or Maler), மாலர் (Malhar). திராவிடக் கலப்பு மொழிகளாக லதாடி (Ladhāḍi), பாரியா (Bharia) ஆகிய இருமொழிகள் கொடுக்கப் பட்டுள்ளன. கூவி (Kuvi) மொழி பற்றிய குறிப்பு மட்டும் தொகுதி நான்கின் பிற்சேர்க்கையில் கொடுக்கப்பட்டுள்ளது.

கிரியர்சன் தம்முடைய ஆய்வில் கொடுத்துள்ள மொழி களின் வகைகளும், வகைப்படுத்துதலும் 1931ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பு வரை பின்பற்றப்பட்டன. 1961ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் கொடுக்கப்பட்டுள்ள மொழிகளின் வகைகளும், வகைப்படுத்துதலும் கிரியர்சனின் ஆய்வை அடியொற்றியே சில மாறுதல்களுடன் கொடுக்கப் பட்டுள்ளன. இந்தியத் துணைக் கண்டமாகிய பெரிய நிலப் பரப்பில் பல வட்டாரங்களில் பலவகை இயற்கைச் சூழ்நிலை களில் வாழும் பலதரப்பட்ட மக்கள் பல மொழிக் குடும்பங்களைச் சேர்ந்த மொழிகளைப் பேசும் நிலையில் இன்றுவரை மக்கள் பேசும் மொழி, கிளை மொழிகளின் சொற்கள், வாக்கியங்கள் ஆகியவைகளின் தரவுகளைச் (Specimen) சேகரித்து அவைகளை ஆராய்ந்து மொழிகளாகவும், கிளை மொழிகளாகவும் வகைப்படுத்தி, அம்மொழிகளின் மொழிக் குடும்பங்களை அடையாளங்கண்டதோடு, ஒரு மொழிக் குடும்பத்தின் மொழிகளை வகைப்படுத்தியும் பாகுபடுத்தியும் காட்டிய ஒரே ஆய்வு சர் ஆபிரகாம் கிரியர்சனின் ஆய்வாகும். அவருடைய ஆய்வுக்குப் பின்னர் இந்திய நாடளாவிய ஆய்வு இன்று வரை நடத்தப்படவில்லை. திராவிட மொழிகளைப் பற்றியும் அவைகளைப் பேசும் மக்களைப் பற்றியும் கிரியர்சன் கூறியுள்ள கருத்துக்கள் சில இங்குக் கொடுக்கப்பட்டுள்ளன:

1. திராவிட இனம் இந்தியத் துணைக்கண்டம் முழுமையாகப் பரவியிருந்தது. ஆனால் எல்லோரும் தற்பொழுது திராவிட மொழிகளைப் பேசவில்லை. வட இந்தியாவில் வாழ்ந்த திராவிடர்கள் பெரும்பாலும் ஆரியமயமாக்கப்பட்டு விட்டனர். எனவே வடஇந்தியாவில் வாழும் பெரும்பான்மைத் திராவிடர்கள் தம் இனக்கூறுகளை (ethnic traits) இன்றும் கொண்டிருந்தாலும் தங்களின் தாய்த் திராவிட மொழியல்லாது பிற ஆரிய மொழிகளைத் தங்கள் தாய்மொழியாகத் தற்பொழுது பேசுகின்றனர்.

2. மேலும் உடற்கூறுகளால் (physical traits) திராவிட இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று மானிடவியல் அறிஞர்களால்

பகுக்கபட்ட மத்திய, தென் இந்தியாவில் வாழும் பல பழங்குடி இனங்களைச் சேர்ந்த மக்கள் மொழியால் இருவேறு கூட்டத்தினர் களாகத் தாய்மொழித் திராவிட மொழி பேசுபவர்களாகவும் முண்டா மொழிகளைப் பேசுபவர்களாகவும் உள்ளனர்.

3. திராவிட மொழி பேசும் மக்கள் இந்தியத் துணைக் கண்டத்தில் நெடுங்காலமாக வாழ்ந்து வருகின்றனர். ஆனால் இவர்கள் இந்தியத் துணைக்கண்டத்தைத் தாயகமாகக் கொண்டு வாழ்ந்து வருபவர்களா இல்லை வேறு இடங்களி லிருந்து இடம்பெயர்ந்து குடியேறியவர்களா? என்பது புரியவில்லை. இந்தியாவிற்கு மேற்கேயுள்ள பலுச்சிஸ்தான் பகுதிகளில் திராவிட மொழி பேசும் பிராஹூய் (Brahui) பழங்குடியினர்கள் வாழ்வதை ஆதாரங்காட்டித் திராவிட மொழிகள் பேசும் மக்கள் இந்தியத் துணைக்கண்டத்திற்குள் வேறு ஓர் இடத்திலிருந்து வடமேற்குப் பகுதி வழியாக வந்திருக்க வேண்டும் என்று கால்டுவெல் போன்ற அறிஞர்கள் கருதுகின்றனர். இருப்பினும் இந்தியத் துணைக்கண்டத்தின் கிழக்கு அல்லது தென் பகுதிகளிலிருந்து முன்னேறிவந்த மக்களாகவும் இவர்கள் இருக்கக்கூடும்.[21]

4. மேக்ஸ் முல்லரின் (Max Müller) கருத்து இங்குக் கவனிக்கத்தக்கதாக உள்ளது. அவரின் கூற்றுப்படி ஒரான் (Oraon), இராஜ்மகாலி (Rajmahali), கோண்டி (Gondi) ஆகிய திராவிட மொழிகளுக்கும் ஹோ (Ho), சந்தால் (Santal), பூமிஜ் (Bhumij), முண்டாலா (Mundala) ஆகியவர்கள் பேசும் முண்டா மொழிகளுக்கும் இடையில் பல ஒற்றுமைகள் காணப்பட்டாலும் இரண்டு மொழிக்குடும்பங்களிலும் இல்லாத சில மொழிக்கூறுகளும் (linguistic traits) உள்ளன.[22] இத்தகைய கூறுகள் திராவிட மொழியினர் இத்துணைக் கண்டத்திற்குள் வரும் முன்னர்ப் பேசப்பட்ட மொழிகளின் கூறுகளாக இருக்கலாம் என்பது மேக்ஸ் முல்லரின் கருத்தாகும். 1901ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு அறிக்கையில் காணும் திராவிட மொழிகளின் பிரிவுகளும், கிரியர்சனின் இந்திய மொழி அளவாய்வில் கொடுக்கப்பட்டுள்ள திராவிட மொழிகளின் பிரிவுகளும் கிரியர்சனால் ஏற்படுத்தப்பட்ட பிரிவுகள் என்பதால் இரண்டும் ஒன்றேயாகும்.

# இந்திய மக்கள்தொகைக் கணக்கெடுப்புகளில் திராவிட மொழிகள்

## *1881, 1891ஆம் ஆண்டுகளில் மக்கள்தொகைக் கணக்கெடுப்புகள்*

இந்திய மக்கள்தொகைக் கணகெடுப்பு 1881ஆம் ஆண்டு முதல் எடுக்கப்பட்டு வருகிறது. மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் மக்கள் பேசும் மொழிகளின் தகவல்களும் சேகரிக்கப்படுகின்றன. 1881ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பில், அகில இந்திய அளவில் மொழிகளைப் பேசும் மக்களின் மக்கள்தொகை பற்றிய தகவல்கள் கொடுக்கப்படவில்லை. அந்தந்தப் பிரதேசங் களில் பேசப்படும் மொழிகளைப் பற்றிய தகவல்கள் அந்தந்த மொழிகளைப் பேசும் மக்கள்தொகையின் தகவல்கள் போன்ற செய்திகள் அந்தந்தப் பிரதேசங்களுக்குரிய அறிக்கைகளில் (Provincial Report) வெளியிடப்பட்டுள்ளன. இந்த நிலை 1891ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் மாற்றப்பட்டு ஒவ்வொரு மொழிக்கும் அகில இந்திய அளவில் பேசும் மக்களின் எண்ணிக்கை அடிப்படையில் தகவல்கள் கொடுக்கப்பட்டுள்ளன. 1891ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் கீழ்க்கண்ட 12 திராவிட மொழிகள் பத்தாவது அட்டவணையில் பட்டியலிடப் பட்டுள்ளன: ஒரான் (Oraon), கந்த்/கோந்த் (Khand/Khond), கன்னடம், கொடகு/கூர்கி (Kodag/Coorgi), கோட்டா (Kota), கோண்ட் (Gond), தமிழ், துளு (Tulu), தெலுங்கு, மலையாளம். இவையல்லாது சிறப்பில்லாத பொதுவான திராவிட மொழிகள் மூன்று எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் அவைகளின் பெயர்கள் கொடுக்கப்பட வில்லை. மேலும் கதபா (Gadaba) மொழி ஆஸ்த்ரிக் (Austric) மொழி என அடையாளங்காணப்பட்டுள்ளது. இருளர் (1, 614 நபர்கள்), குரும்பர் (5, 288 நபர்கள்) ஆகியவர் களின் பேச்சுவழக்குகள் தமிழ் மொழியின் கிளைமொழி களாகவும், படகர்களின் பேச்சுவழக்கு (Badaga - 30,656 நபர்கள்) கன்னட மொழியின் கிளைமொழியாகவும், கொரகா (Koraga - 1,868 நபர்கள்) துளு மொழியின் கிளைமொழியாகவும் அடையாளங்காணப்பட்டுள்ளன. இருளர்களின் பேச்சுவழக்கு தமிழின் கிளைமொழியாக அடையாளம் காணப்பட்டிருந் தாலும் அந்தந்தப் பழங்குடிமக்களின் மொத்த மக்கள்தொகை அவர்கள் பேசும் மொழியின் மக்கள்தொகை பற்றிய ஒப்பீட்டுப் பட்டியலில் இருளர்களின் பேச்சு வழக்கைப் பழங்குடியினர் பேசும் மொழி என்று குறிப்பிடப்பட்டுள்ளது (1891 மக்கள்

தொகை: 155). மேலும் ஒட்டர்கள் (Wadder), கைகடிகள் (Kaikadi) பேசும் பேச்சுவழக்குகள் தெலுங்கு மொழியை ஆதாரமாகக் கொண்டிருந்தாலும் அவர்கள் வாழும் இடங்களுக்குத் தகுந்தவாறு பல மாறுதல்களை அடைந்துள்ளதாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. மண்தோண்டியும் (ஒட்டர்), கூடைமுடைந்தும் (கைகடி) வாழும் இம்மக்களின் மொழிகள் மெட்ராஸ் பிரசிடென்ஸி (Madras Presidency) தவிரப் பிற இடங்களில் நாடோடி மக்கள் (Gipsy) பேசும் மொழிகளுடன் சேர்க்கப்பட்டுள்ளன.[17] கல் உடைக்கும், மண்தோண்டும் வேலைகளைப் பாரம்பரியத் தொழிலாகக் கொண்டுள்ள ஒட்டர் இன மக்கள் மேற்கில் பெஷாவரிலிருந்து (Peshawar) கிழக்கில் கடல் வரை உள்ள எல்லைகளுக்கு நடுவில் உள்ள எல்லாப் பகுதிகளிலும் வாழ்கின்றபடியால் அந்தந்த வட்டார மொழிகளின் தாக்கத்தால் அவர்களுடைய பேச்சு வழக்கில் உள்ள திராவிட மொழிக் கூறுகளும் குறைகின்றன (1891 மக்கள்தொகை: 137)[18]. இவர்களின் தாய் நாடு தக்காண (Deccan) பீட பூமியின் கிழக்குப் பகுதியில் உள்ளது போன்ற குறிப்புகள் 1891ஆம் ஆண்டு மக்கள்தொகை அறிக்கையில் இடம்பெற்றதோடு கீழ்க்கண்ட 22 திராவிட மொழிகள், பேச்சுவழக்குகளின் பெயர்கள் பதிவு செய்யப் பட்டுள்ளன: இருளர் (Irula), எருக்கலா (Yeruka), ஏனாதி (Yanadi), ஒட்டர் (Wadder), ஒரான் (Oraon), கந்த்/கோந்த் (Khand/Khond), கன்னடம், குறும்பர் (Kurumbar), கைகடி (Kaikadi), கொடகு/கூர்கி (Kodagu/ Coorgi), கொரகர் (Koraga), கோட்டா (Kota), கோண்ட் (Gond), செஞ்சு (Chenchu), தமிழ், துளு, தெலுங்கு, தோடா (Toda), படகர் (Badaga), பிராஹுீய் (Brahui), மலையாளம், மால் - பகாடியா (Mal - Pahadia). இவை தவிரத் திராவிட மொழிகளல்லாத கார்வார் (Kharwer - 7, 659 நபர்கள்), சிங்களம் (Sinhalese - 187 நபர்கள்), மாஹல் (Mahl- 3,167 நபர்கள்) ஆகிய மூன்று மொழிகளும் திராவிட மொழிகளாகப் பதிவுசெய்யப் பட்டுள்ளன.

### 1901ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு

கிரியர்சன் இந்திய மொழிகளை அளவாய்வு செய்து தொகுக்கும் பணியில் சேர்ந்தபின்னர் 1901ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பு ஆரம்பமானதால் அவரே 1901ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பின் மொழி சம்பந்தமான கணக்கெடுப்புப் பணிகளைச் செய்து முடித்தார். 1901ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு அறிக்கையில் உள்ள மொழி தொடர்பான அத்தியாயம் கிரியர்சனால் எழுதப்பட்டதாகும். இவர் திராவிட மொழிகளைத் திராவிட - முண்டா (Dravido - Munda) மொழிக்குடும்பம் எனும் தலைப்பில் பட்டியலிட்

டுள்ளார். இதில் பூர்வீகத் திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த 14 மொழிகள் இடம் பெற்றுள்ளன. கோலாமி (Kolami) மொழியைக் கோண்டி (Gondi) மொழியின் கிளைமொழியாகக் (Dialect) கொடுத்துள்ளார். எனவே கோண்டி மொழியைப் பேசும் மக்கள்தொகை (1, 125, 479 நபர்கள்) கோலாமி மொழி பேசும் மக்களையும் உள்ளடக்கியதாகும். ஆனால் திராவிட மொழிகளின் பிரிவுகளைக் காட்டும்பொழுது கோலாமியை ஆந்திரக் கூட்டத்தைச் (Andhra group) சேர்ந்த மொழியாகக் கொடுத்துள்ளார். கோண்டியைத் திராவிட மொழிக் குடும்பத்தின் இடைப்பட்ட மொழிக்கூட்டத்தில் (Intermediate Language Group) சேர்த்துள்ளார். ஆகவே கோலாமி கோண்டி மொழியின் கிளைமொழியாகக் கொடுக்கப்பட்டாலும் தனி யொரு மொழியென்பது தெளிவாகிறது. கிரியர்சனின் திராவிட மொழிப் பிரிவுகளின் வரைபடம் பின்னிணைப்பு 1இல் கொடுக்கப்பட்டுள்ளது.

1901ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் இருளர் (932 நபர்கள்), கசுவர் (Kasuva - 241 நபர்கள்), எருக்கலர் (Yerukala - 44, 768 நபர்கள்) ஆகிய மூன்று பேச்சு வழக்குகளும் தமிழின் சிறுபான்மைக் கிளைமொழிகளாகும் (petty dialects) கொர்ச்சா அல்லது கொரவா என்றழைக்கப்படும் எருக்கலர் இனத்தின் பிரிவினர்கள் நாடோடி மொழிகளின் பட்டியலில் சேர்க்கப்பட்டுள்ளனர். கருநாடகத்தின் குடகு மாகாணத்தில் வாழும் எரவா (Yerava - 13, 175 நபர்கள்) பழங்குடியினர்கள் பேசும் பேச்சுவழக்கை மலையாளத்தின் கிளைமொழியாகக் கருதப்பட்டுள்ளது. கோம்டௌ (Kōmtāū - 3, 490 நபர்கள்), ஏனாதி (Yānādi), செஞ்சு (Chentzu) போன்ற இனத்தவர்கள் பேசும் பேச்சுவழக்குகள் தெலுங்கு மொழியின் கிளை மொழிகளாகக் கருதப்பட்டன. கைகடி, ஒட்டர், ஏனாதி, செஞ்சு போன்ற இனத்தவர்கள் பேசும் பேச்சுவழக்குகள் தெலுங்கு மொழியின் கிளைமொழியாகக் கருதப்பட்டாலும் அவைகளின் மக்கள்தொகை பற்றிய புள்ளி விவரங்கள் கொடுக்கப்படவில்லை. நீலகிரியில் வாழும் படகர்களின் (34, 229 நபர்கள்) பேச்சுவழக்கு கன்னட மொழியின் கிளைமொழியாகவும் குறும்பர்களின் (Kurumba or Kurubas - 9, 206 நபர்கள்) மொழி தமிழ் மொழி கலந்த இழிவான கன்னட மொழியாகவும் பதிவு செய்யப்பட்டுள்ளன. கொரகா (Koraga - 3, 144 நபர்கள்), பெல்லார (Bellara - 196 நபர்கள்) ஆகியவர்களின் பேச்சு வழக்குகள் துளு மொழியின் கிளைமொழிகளாகப் பட்டியலிடப்பட்டுள்ளன.

மாடி அல்லது மாடியா (Mārī or Māriā - *59, 749 நபர்கள்*), பட்ஜி (Pāṛaji - *8, 833 நபர்கள்*), கட்டு அல்லது கொட்டெ (Gaṭṭu or Goṭṭe - *5, 494 நபர்கள்*), கோய் (Kōī - *8, 144 நபர்கள்*), கோலாமி (Kōlamī - *1, 505 நபர்கள்*), நாய்கி (Naiki), லதாடி (Ladhādī) ஆகிய அனைத்துப் பழங்குடி மக்களின் பேச்சு வழக்குகளும் கோண்டி (Gōṇḍi) மொழியின் கிளைமொழிகளாகப் பதிவு செய்யப் பட்டுள்ளன. கோண்டி மொழியைப் பற்றிக் கூறும் பொழுது இந்த மொழி கணக்கற்ற கிளை மொழிகளைக் கொண்டுள்ளது. அவைகளில் பஸ்தாரில் (Bastar) பேசப்படும் மாடி (Mari) அல்லது மாடியா (Maria), பட்ஜி (Parji) ஆகிய கிளைமொழிகளும், சந்தா (Chanda), விசயநகரம் (Vijayanagaram), கோதாவரி (Godavari) ஆகிய பகுதிகளில் வாழும் பழங்குடிமக்களால் பேசப்படும் கட்டு (Gaṭṭu) அல்லது கொட்டெ (Goṭṭe) என்பது மலைப் பிரதேசக் கோய் (Hill Kōīs) பழங்குடியினர்கள் பேசும் வழக்காகும். மேலும் கட்டு அல்லது கொட்டெ எனும் பேச்சு வழக்கு கோய் அல்லது கோயா (Kōī or Kōyā) பழங்குடி மக்களின் பேச்சுவழக்கோடு தொடர்புள்ளதாக உள்ளது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

குடுக் (Kurukh) மொழியானது மத்தியப்பிரதேசப் பகுதிகளில் (Central Province) விவசாயிகள் பேசும் மொழி என்ற பொருளில் கிஸான் (Kisan) என்றும் பூமியைத் தோண்டுபவர்கள் பேசும் மொழி எனும் பொருளில் கோடா (Kōdā) என்றும் அழைக்கப்படுவதாகவும், பெர்கா ஒரான் (Berga Oraon) என்று கஸ்கா மாகாணத்தில் கூறப்படும் (Native State of Gangapur) கிளைமொழி தவிர வேறு கிளைமொழிகள் குடுக் மொழியில் இல்லை என்றும் 1901ஆம் ஆண்டு மக்கள்தொகை அறிக்கையில் கூறப்பட்டுள்ளது. மேலும் இராஞ்சி (Ranji) நகருக்கு அருகாமையில் வாழும் ஒரான் பழங்குடியினர்கள் தங்களின் தாய்மொழியாகிய குடுக் (Kurukh) மொழியை விட்டுவிட்டு ஹொரோலியா ஜாகர் (Hōrōliā Jhagar) எனப்படும் ஒருவகை இழிவான (corrupt) முண்டாரி (Mundari) மொழியைப் பேசுவதாகக் கூறப்பட்டுள்ளது (*1901 மக்கள்தொகை, மறுபதிப்பு 1961 மக்கள்தொகை: 397*). மாலேர் (Malhar - *465 நபர்கள்*) தனியாகக் கணக்கிடப்பட்டிருந்தாலும் அவர்களின் மொழி குடுக் மொழியின் கிளைமொழியாகக் கருதப்பட்டுள்ளது.

பிராஹீய் (Brahui) மொழியைப் பற்றியும் அம்மொழியைப் பேசும் மக்களைப் பற்றியும் 1901ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பு அறிக்கையில் கூறப்பட்டிருக்கும் கருத்துக்கள் மிகவும் முக்கியமான கருத்துக்களாகும் பிராஹீய் பழங்குடியினர்கள்

மானிடவியல் ஆய்வுகளின் அடிப்படையில் தென்னிந்திய மக்களோடு ஒப்பிட்டுப் பார்த்து இருவரும் ஒரே கலாச்சாரத்தைச் சார்ந்தவர்கள் என இன்றுவரை நிரூபிக்கப்படவில்லையென்றும் பிராஹீய் இன மக்களின் தோல் கறுப்பு நிறமாக இருப்பது அவர்களைத் தென்னிந்திய மக்களோடு தொடர்புபடுத்திக் காட்டுவதாகவும் கூறப்பட்டு உள்ளது. மேலும் பிராஹீய் பழங்குடிமக்கள் அதிகமாக வாழும் பாகிஸ்தானில் உள்ள பலுச்சிஸ்தான் (Balochistan) மாகாணப் பகுதிகளிலிருந்து பிராஹீய் மொழி பேசும் மக்களின் எண்ணிக்கை குறிப்பிடப்படவில்லை. அவர்களுடைய சொந்த மாகாணத்தில் அவர்கள் தங்களின் தாய்மொழியல்லாது பிற மொழிகளைப் பேசுகின்றனர். மேலும் பிராஹீய் பழங்குடி மக்கள் வேறு இனத்தவர்களைத் திருமணம் செய்து கொள்ளும் பழக்கத்தைக் கடைப்பிடிப்பதால், அப்படிப் பட்ட குடும்பங்களில் பொதுவாகக் குழந்தைகள் தங்களின் தாயின் மொழியை மட்டும் பேசும் வழக்கம் இருந்து வருகிறது. எனவே 1901ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் குறிக்கப் பட்டிருக்கும் பிராஹீய் மொழி பேசும் மக்களின் எண்ணிக்கை சிந்த் (Sindh) மாகாணப் பகுதிகளிலிருந்து கிடைத்திருக்கும் தகவல்களாகும் (1901ஆம் ஆண்டு மக்கள்தொகை, மறுபதிப்பு 1961ஆம் ஆண்டு மக்கள் தொகை: 397).[19]

ஆங்கிலேயர்களின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த பர்மா போன்ற நாடுகளில் தமிழ் மொழி கிலிங் (Kling) அல்லது கலிங் (Kaling) என அழைக்கப்படுவதாகவும் தக்சிணப் (Dakshin) பிரதேச முகம்மதியர்கள் மலபார் (Malabar) என அழைப்பதாகவும் இந்தியாவின் மேற்குப்பகுதியில் வாழ்பவர்கள் அரவம் (Arava) என அழைப்பதாகவும் 1901ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு அறிக்கையில் கூறப்பட்டுள்ளது. இன்றளவிலும் தமிழர்கள் தெலுங்கு, கன்னடம் மொழிகளைப் பேசும் மக்களை வடுகர்கள் (வட நாட்டைச் சேர்ந்தவர்கள்) என்பதும் தெலுங்கர்கள் தமிழர்களை அரவாலு (அரவா நாட்டைச் சேர்ந்தவர்கள்) என அழைப்பதையும், கன்னடர்கள் தமிழர்களைக் கொங்கர்கள் (கொங்கு நாட்டைச் சேர்ந்தவர்கள்) என அழைப்பதையும் காணலாம். மொத்தத்தில் கீழ்க்கண்ட 37 மொழிகள் அல்லது கிளைமொழிகளைப் பற்றிய தகவல்கள் 1901ஆம் ஆண்டு மக்கள்தொகை அறிக்கையில் காணக் கிடக்கின்றன: இருளர், எரவா (Yerava), எருக்கல (Yerukkala), ஏனாதி (Yenadi), ஒட்டர் (Waddar), கசுவ (Kasuva), கட்டு அல்லது கொட்டெ (Gaṭṭu or Goṭṭe), கந்த், கன்னடம், குடகு (Kudagu), குடுக், குறும்பர், கூய் (Kūî), கைகடி (Kaikādî), கொரகர் (Koraga), கோட்டா (Kota), கோண்டி, கோம்டௌ (Kōmtāū), கோய்

அல்லது கோயா (Kōī or Kōyā), கோலாமி, செஞ்சு (Chentzu), தமிழ், துளு, தெலுங்கு, தோடா (Toda), நாய்கீ (Naikī), படகர், பட்ஜி (Parji), பிராஹுீய் (Brāhūī), பெல்லார (Bellara), மலசர் (Malasar), மலைகோய் (Hill Koi), மலையாளம், மாடி அல்லது மாடியா (Mārī or Māriā), மால்தோ (Malto), மாலர் (Malhar), லதாடி (Ladhādī).

### 1921ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு

1921ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு அறிக்கையில் 188 மொழிகள் இந்தியாவில் பேசப்படுவதாகக் கூறப்பட்டுள்ளது. 1921ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக் கெடுப்பில் கண்டுள்ள மொழிகளைப் பற்றிய தகவல்கள் கிரியர்சனின் இந்திய மொழிகள் அளவாய்வு நூலின் முன்னுரைத் தொகுதியிலிருந்து (பக். 397 - 398) எடுக்கப்பட்டுள்ளன. கீழ்க்கண்ட 16 திராவிட மொழிகள் பேசும் மக்கள்தொகை மட்டும் அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளது: கந்த் அல்லது கோந்த் (Kandhi or Khond), கன்னடம், குடகு அல்லது கூர்கி (Kudagu or Coorgi), குடுக் அல்லது ஒரான் (Kurukh or Oraon), கோட்டா, கோண்டி (Gondi), கோலாமி (Kolami), தமிழ், துளு, தெலுங்கு, தோடா, பிராஹுீய் (Brahui), மலையாளம், மால்தோ அல்லது மாலேர் (Malto or Maler), மாலர் (Malhar).

### 1931ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு

பிரிட்டிஷ் இந்தியா (British India) என்றழைக்கப்பட்ட இந்தியாவின் கடைசி மக்கள்தொகைக் கணக்கெடுப்பு 1931ஆம் ஆண்டு நடைபெற்றது. 1941ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பு இரண்டாம் உலகப்போர் காரணமாகத் தடைப்பட்டு விட்டது. 1931ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பின் பகுதி இரண்டில் உள்ள அட்டவணை 15இல் இந்தியாவில் பேசப்படும் ஒவ்வொரு மொழியின் மக்கள்தொகை பற்றிய தகவல்கள் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றில் கீழ்க்கண்ட 15 மொழிகள் திராவிட மொழிகளாகும்: கந்த் அல்லது கூய் (Kandh or Kui), கன்னடம், குடகு அல்லது கூர்கி (Kudagu or Coorgi), குடுக் அல்லது ஒரான் (Kurukh or Oraon), கொண்டா (Konda), கோட்டா, கோலாமி (Kolami), தமிழ், துளு, தெலுங்கு, தோடா, பிராஹுீய் (Brahui), மலையாளம், மால்தோ (Malto). கொண்டா மொழி பிற மொழிகள் எனும் தலைப்பின்கீழ்ப் பட்டியலிடப்பட்டுள்ளது (1931 மக்கள்தொகை அறிக்கை, தொகுதி - 2, பக். 471 - 510). சுதந்திரத்திற்குப் பின்பு இந்தியா, பாகிஸ்தான் ஆகிய நாடுகள் பிரிட்டிஷ் கால இந்தியாவிலிருந்து பிரிக்கப்பட்டுவிட்டதால்

பாகிஸ்தானில் உள்ள பலுச்சிஸ்தான், சிந்து போன்ற மாகாணங்களில் வாழும் பூர்வீகப் பழங்குடி மக்களான பிராஹுீய் பழங்குடி மக்களின் மொழி 1931ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பில்தான் கடைசியாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. இந்தியாவின் சுதந்திரத்திற்குப் பிறகு பிராஹுீய் மொழி இந்திய மொழியல்லாது வேறு ஒரு நாட்டில் பேசப்படும் திராவிட மொழியாகிவிட்டது. எனவே, இன்றளவில் பேசப்படும் திராவிட மொழிகளில் பிராஹுீய் மொழி ஒன்றுதான் இந்தியாவிலல்லாது பிற நாட்டில் பேசப்படும் மொழியாக விளங்குகிறது. ஏனைய மொழிகள் அனைத்தும் இந்தியத் திருநாட்டில் பேசப்படுகின்றன.

1931ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு அறிக்கையில் இந்தியாவில் பேசப்படும் மொழிகளைப் பற்றியும் அவைகளைப் பேசும் மக்களைப் பற்றியும் கூறப்பட்டிருக்கும் சில கருத்துக்கள் மிகவும் இன்றியமையாதனவாக உள்ளன. அத்தகைய கருத்துக்களில் திராவிட மொழிகளைப் பற்றியும் அவைகளைப் பேசும் மக்களைப் பற்றியும் கூறப்பட்டிருக்கும் சில கருத்துக்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

1. தற்காலத்தில் திராவிட மொழிகள் பேசும் பல பழங்குடியினர்கள் பாரம்பரியமாக முண்டா (Munda group) மொழிகளைத் தாய்மொழியாகப் பேசியிருக்க வேண்டும்.

2. மாலேர் (Maler) அல்லது சௌரிய பகாடியா (Sauria Paharia) எனும் பழங்குடியினர் இன்றளவிலும் திராவிட மொழியைப் பேசினாலும் அவர்களின் மற்றொரு பிரிவினராகிய மால் பகாடியா (Mal Paharia) எனும் பழங்குடியினர் தங்களின் தாய்மொழியான திராவிட மொழியை விட்டுவிட்டுத் தற்பொழுது இந்தோ-ஆரிய மொழியாகிய வங்காள மொழியைப் (Bengali) பேசுகின்றனர்.

3. முண்டா மொழிகளைப் (Munda group of languages) பேசும் பழங்குடியினர்கள் முதலில் வட இந்தியா முழுமையாகப் பரவியிருந்திருக்க வேண்டும். திராவிடர்களின் நாகரிகங்கள் சிந்து - கங்கை ஆறுகளின் சமவெளிப் பகுதிகளில் பரவிய பின்னர் முண்டா மொழிகள் பேசும் மக்கள் திராவிட மொழிகள் பேசும் மக்களால் மலை, காடுகளின் உட்பகுதிகளுக்குத் தள்ளப் பட்டிருக்கின்றனர்.

4. தென்னிந்தியாவில் காடர் (Kaḍar), குறுமன் (Kuṟuman), பழியன் (Paḻiyan), பனியன் (Paniyan), தண்ட புலயன் (Taṇḍa

Pulayan) போன்ற பழங்குடியினர்கள் பேசும் மொழிகளில் முண்டா மொழிக் கூறுகள் (Munda language traits) இருக்க வாய்ப்புள்ளது. ஆனால் கிரியர்சன் (Grierson) தென்னிந்திய மொழிகளைப் பற்றிய தகவல்களைச் சேகரிக்காததால் முண்டா மொழிக்கூறுகள் மேற்கண்ட பழங்குடியினர்கள் பேச்சு வழக்கில் உள்ளனவா? இல்லையா? என்பதை அறிய முடியவில்லை.

1891, 1901, 1921, 1931 ஆகிய மக்கள்தொகைக் கணக்கெடுப்புகளிலும் கிரியர்சனின் இந்திய மொழி அளவாய்விலும் கொடுக்கப்பட்டுள்ள திராவிட மொழிகள், கிளைமொழிகள் அட்டவணை 1இல் கொடுக்கப்பட்டுள்ளன. மொழி, கிளை மொழிகளின் பெயர்களை அவைகளில் கண்டுள்ளவாறு கொடுப்பதற்கு முயற்சி செய்யப்பட்டுள்ளது.

### 1951ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு

சுதந்திர இந்தியாவில் 1951ஆம் ஆண்டு நடத்தப்பட்ட மக்கள்தொகைக் கணக்கெடுப்பு முதல் மக்கள்தொகைக் கணக்கெடுப்பாகும். இதற்குமுன் நடத்தப்பட்ட மக்கள் தொகைக் கணக்கெடுப்புகள் அனைத்தும் பிரிட்டிஷ் இந்தியாவிற்காக (British India) நடத்தப்பட்டவைகளாகும். எனவே சுதந்திர இந்தியாவைத் தவிரப் பாகிஸ்தான் (Pakistan), பர்மா (Burma), வங்கதேசம் (Bangladesh), நேபாளம் (Nepal) போன்ற பிற நாடுகளின் தகவல்களும் அவைகளில் இடம்பெற்றிருக்கும். ஆனால் 1951ஆம் ஆண்டுகளுக்குப் பின்பு சேகரிக்கப்படும் தகவல்கள் அனைத்தும் சுதந்திர இந்தியாவிற்கு மட்டுமே உரியவை என்பது குறிப்பிடத்தக்கது. 1951ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பில் "தாய்மொழி என்பது ஒருவரின் தொட்டில் காலம் முதல் பேசப்படும் மொழியென்றும், செவிடு, ஊமை போன்றவர்களுக்கு அவர்களின் தாய் பேசும் மொழி யென்றும்" முடிவுசெய்யப்பட்டது. குழந்தைப் பருவம் முதல் முதன் முதலில் ஒரு குழந்தை தன் தாயின் பேச்சைத்தான் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருப்பதால் தாய் பேசுவதைப் பார்த்துக் குழந்தை ஒரு மொழியைக் கற்றுக் கொள்கிறது என்பதன் அடிப்படையில் தாய் பேசும் மொழிக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. மேலும் இந்தியச் சமுதாயத்தில் திருமணங்கள் சமுதாயக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு ஒரே சமூகங்களுக்கிடையே நடைபெறுவதால் தாய்மொழி என்பது ஒரு தாய் பேசும் மொழிமட்டுமல்லாது அக்குடும்பத்து அனைத்து உறுப்பினர்களும் பேசும் மொழியாகவே பொதுவாக இருக்கும். 1951ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் 845 மொழிகள்

இந்தியாவில் பேசப்படுவதாகக் கணக்கிடப்பட்டது. ஆனால் அவைகளை மொழிக் குடும்பங்கள் வாரியாகப் பாகுபடுத்திக் காட்டவில்லை. பதினைந்து அட்டவணை மொழிகள் (Scheduled Languages) தனியாகவும், இலட்சம் மக்களுக்கு மேல் பேசப்படும் பழங்குடியினர்களின் மொழிகள் தனியாகவும், ஒரு இலட்சத்திற்குக் கீழ் மக்கள்தொகை கொண்ட மொழிகள் தனியாகவும், பிறநாடுகளைச் சார்ந்த மொழிகள் தனியாகவும் தனித்தனியாக அட்டவணையிடப்பட்டுள்ளன. இந்த 845 மொழிகளில் 63 மொழிகள் பிறநாட்டு மொழிகள் அல்லது பிறநாட்டினர்களால் பேசப்படும் மொழிகளாகக் கருதப்படு கின்றன. 1951ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் இந்தியாவில் பேசப்படும் மொழிகளாக அடையாளங்காணப் பட்டிருக்கும் 845 மொழிகளில் கீழ்க்கண்ட 52 மொழிகள் திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்தவைகளாகும்: ஆந்திரா (Andhra), இலட்சதீவு (Laccadive), எருக்கலா அல்லது இருளா (கொரவா) (Yerukala or Irula - Korava), கதபா (Gadaba), கரண்டி (Karandi), கன்னடம் (Kannada), காலாடி (Kalari), கிஸான் (Kisan), குடுக் அல்லது ஒரான் (Kurukh or Oraon), கூய் (Kui), கூர்கி அல்லது கொடகு (Coorgi or Kodagu), கைகடி (Kaikadi), கொண்டா (Konda), கோண்டி (Gondi), கோந்த் அல்லது கந்த் (Khond or Kondh), கோயா (Koya), கோலாமி (Kolami), கோலாலி அல்லது ஹோலியா (Golali or Holiya), செஞ்சு (Chenchu), டாங்கடி (Dhangri), டாங்கர் (Dhangar), டொம்மரி (Dommari), டோர்லி (Dorli), தமிழ் (Tamil), துர்வா (Dhurwa), துளு (Tulu), தெலுங்கு (Telugu), தோடா (Toda), நாகர்ச்சி (Nagarchi), படகா (Badaga), பட்ஜி (Parji), பர்தான் (Pardhan), பாரியா (Bharia), பெங்கோ (Pengo), பேராடி (Beradi), பேராரி (Berari), மதராசி (Madrasi), மலபாரி (Malabari), மலயன் (Malayan), மலையாளம் (Malayalam), மன்னே (Manne), மாடியா (Maria), மால்தோ (Malto), மாலர் (Malar), மொண்டி (Mondi), மோச்சி (Mochi), வட்டாரி (Waddari), வதாரி (Vadari), வாணி (Vani), ஜதாப்பு அல்லது கோந்து (Jatapu or Khond), ஹலியன் (Halian).

## 1961ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு

1961ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் இந்தியாவில் பேசப்படும் அனைத்து மொழிகளையும் மக்கள் எவ்வாறு அழைக்கின்றார்களோ அவ்வாறே எந்தவித மாற்றமும் செய்யாமல் பதிவு செயவதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன (நிகாம் - Nigam, 1972: XV). அதுமட்டுமன்றி அனைத்துத் தாய்மொழிப் பெயர்களையும் மொழிக்குடும்பம் வாரியாகப்

பிரித்ததோடு மட்டுமல்லாது ஒவ்வொரு மொழிகளின் கிளை மொழிகளாக அல்லது மாற்றுப் பெயர்களாக அல்லது அம்மொழி பேசும் மக்களின் சாதிப் பெயர், வட்டாரப் பெயர்களாக வந்திருக்கும் பெயர்களையும் அடையாளங்கண்டு குறிப்பிட்ட அந்த மொழியின் கீழ்ப் பட்டியலிடும் முயற்சிகளும் மேற்கொள்ளப் பட்டு அவ்வாறே கொடுக்கப்பட்டுள்ளன. ஒரு மொழிப் பெயரை ஒரு நபரோ அல்லது இரு நபர்களோ குறிப்பிட்டிருந்தாலும் அவை அனைத்தும் அப்படியே கொடுக்கப்பட்டுள்ளன. 1961ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு மொழிவாரிக் கணக்கெடுப்புக்கு ஒரு தனி நூலை வெளியிட்டது. அதில் இந்தியாவில் 1,652 தாய்மொழிகள் அடையாளங் காணப்பட்டு அவைகளைப் பேசும் மக்கள் தொகையின் தகவல்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவைகளைப் பேசும் மக்கள் தொகை 438,936,918 நபர்கள் ஆகும். 1961ஆம் ஆண்டு மொழிவாரிக் கணக்கெடுப்பின் தகவல்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

| | | |
|---|---|---|
| தாய்மொழிகளின் (Mother tongue) மொத்த எண்ணிக்கை | - | 1,652 |
| அந்நிய நாட்டு மொழிகள் (Foreign Languages) | - | 103 |
| வகைப்படுத்த முடியாத தாய்மொழிகள் (Unclassified Languages) | - | 530 |
| ஒருவர் அல்லது இருவரால் மட்டும் பேசப்படும் மொழிகள் | - | 210 |
| வகைப்படுத்த முடியாத தாய்மொழிகளில் தற்காலிகமாக வகைப்படுத்தப்பட்ட மொழிகள் (சாங் - Chang, கத்ரி - Khatri, நாகரி - Nagari) | - | 3 |
| 1951ஆம் ஆண்டு மக்கள்தொகைக்கணக்கெடுப்பு மொழிகளோடு ஒப்பிட்டுப் பார்க்கக் கூடிய மொழிகள் | - | 572 |
| திராவிட (Dravidian), ஆஸ்ட்ரோ - ஆசியாடிக் (Austro - Asiatic) ஆகிய இரு மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழியாகக் கருதப்படுவது (கிஸான் - Kisan) | - | 1 |
| வகைப்படுத்த முடியாத தாய்மொழிகளைப் பேசும் மக்கள்தொகை | | 62, 432 நபர்கள் |
| 1951ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக் கெடுப்போடு ஒப்பிட்டுப் பார்க்கக்கூடிய 572 மொழிகளைப் பேசும் மக்கள்தொகை (99.38 சதவிகிதம்) | | 436,224,545 |

அந்நிய நாட்டு மொழிகள் (103), வகைப்படுத்த முடியாத மொழிகள் (530), இருமொழிக்குடும்பத்தைச் சார்ந்த மொழி (1) ஆகிய மொழிகள் தவிர எஞ்சியுள்ள 1,018 தாய்மொழிகள் 186 மொழிகளின் தலைப்புகளில் வகைப்படுத்திப் பட்டியலிடப் பட்டுள்ளன (1961 மக்கள்தொகை மொழி அறிக்கை: ccxxx - ccxxxxvii). கதபா (Gadaba) மொழி முண்டா கூட்டத்தைச் (Munda group) சேர்ந்த மொழியாகப் பதிவுசெய்யப்பட்டுள்ளது. அனைத்து மொழிகளையும் இந்தோ - ஐரோப்பிய (Indo-European), திபெத்தோ - சீனம் (Tibeto - Chinese), திராவிடம் (Dravidian), ஆஸ்ட்ரோ - ஆசியாடிக் (Austro-Asiatic) ஆகிய நான்கு மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளாக வகைப் படுத்தியதோடு மட்டுமல்லாது, ஒவ்வொரு மொழிக் குடும்பத்தின் உட் பிரிவுகளும் அவைகளைச் சேர்ந்த மொழிகளும் வகைப்படுத்திக் காட்டப்பட்டுள்ளன.

இந்தியாவில் பேசப்படும் தாய்மொழிகளாக வந்துள்ள திராவிட மொழிகளின் எண்ணிக்கை 153 ஆகும். இவைகளைப் பேசும் மக்கள்தொகை 107, 410, 820 நபர்கள் ஆகும். இந்திய மக்கள்தொகையில் 24.47 விழுக்காட்டினர் திராவிட மொழிகள் பேசும் மக்களாவர். தாய்மொழிகளாக வந்துள்ள 153 மொழிகளும் 20 மொழித்தலைப்புகளில் பாகுபடுத்திக் காட்டப் பட்டுள்ளன. இம்மொழிகளில் பாரியா (Bharia), லதாடி (Ladhadi) ஆகிய இரண்டு மொழிகள் திராவிடக் கலப்பு மொழிகளாகக் (Semi Dravidian Hybrid) கருதப்படுகின்றன. ஏனைய மொழிகளும் அவைகளின் கீழ்ப் பாகுபடுத்தப்பட்டுப் பட்டியலிடப்பட்டுள்ள தாய்மொழிகளின் எண்ணிக்கைகளும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன: கன்னடம் (32), குடுக் அல்லது ஒரான் (9), கூய் (2), கூர்கி அல்லது கொடகு, கொண்டா, கோட்டா (2), கோண்டி (13), கோந்த், கோயா (2), கோலாமி (3), தமிழ் (22), துளு (5), தெலுங்கு (36), தோடா, பட்ஜி (3), மலையாளம் (14), மால்தோ (2). திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த 153 தாய்மொழிகளில் 104 பிரதான மொழிகளைச் சேர்ந்தவைகளாகவும் எஞ்சியுள்ள 49 தாய்மொழிகள் பழங்குடியினர்களின் மொழிகளைச் சேர்ந்ததாகவும் கணக்கிடப்பட்டுள்ளன (1961 மக்கள்தொகை மொழிவாரி அறிக்கை: CXCV). மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் அடையாளங்காணப்படும் மொழிகளில் முக்கியமானவை கூவி (பக். CXCV). இவைகளில் பிராஹுயீ பாகிஸ்தானில் வாழும் பிராஹுயீ பழங்குடியினர்களால் பேசப்படுவதால் இந்திய மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் வரவில்லை. முடியா (Muria - 22,030 நபர்கள்) கோண்டிப் பழங்குடியினர்களின் ஒரு

பிரிவினர்களான முடியா பழங்குடி மக்களால் பேசப்படும் திராவிட மொழியாகும். ஆனால் அது மராட்டிய மொழியின் கீழ் வகைப்படுத்தப்பட்டுள்ளது (பக் CCV). அதற்குரிய காரணங்களும் கூறப்படவில்லை.

1961 ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பின் மொழிவாரி அறிக்கையில் அந்நிய நாட்டு மொழிகளின் கீழ்ப் பட்டியலிடப்பட்டுள்ள மலை/மலய்/மலயா/மலயன் (617 நபர்கள்) எனும் மொழியைத் தென்இந்தியாவில் வாழும் மலயன் (Malayan), மலயக்கண்டி (Malayakkandi) போன்ற பழங்குடி மக்கள் பேசும் திராவிட மொழியாகக் கருதலாம். மேலும் வகைப்படுத்த முடியாத மொழிகள் என்று பட்டியலிடப் பட்டிருக்கும் 527 மொழிகளில் கீழ்க்கண்ட 28 தாய்மொழி களையும் (mother tongue) (பக். CCXXVIII - CCXXIX) அவைகளின் பெயர்களின் பொருள் அடிப்படையில் திராவிட மொழிகளாகக் கருதலாம்: ஆந்தி (Andhi - 6 நபர்கள்), ஒட்கி (Odki - 158 நபர்கள்), கரும்காடன் - (Karumkhatan - 21 நபர்கள்), கவரா (Kavara - 36 நபர்கள்), கவாரி (Gavari - 1 நபர்), கஸ்தூரி பாஷா (Kasturi Bhasha - 14 நபர்கள்), குஞ்செருக்கலா (Kuncherukala - 25 நபர்கள்), குருவிக்காரன் (31 நபர்கள்), குறவஞ்சி (Kuravanji - 99 நபர்கள்), கோனகர் (Konagar - 7 நபர்கள்), டொம்பரி (Dombari - 10 நபர்கள்), தய்யல பாஷா (Dayyala Bhasha - 19 நபர்கள்), ப்ரொஜா (Proja - 14 நபர்கள்), பழியா (Paliya - 18 நபர்கள்), பூசலா (Poosala - 41 நபர்கள்), பேல்தாரி (Beldari - 2, 702 நபர்கள்), மணி (Mani - 3 நபர்கள்), மதாரி Madari - 281 நபர்கள்), மந்துலா (Mandula - 18 நபர்கள்), மாத்கி (Madgi - 3 நபர்கள்), மாத்வாலி (Madwali - 30 நபர்கள்), முட்டாரி (Muttari - 1 நபர்), முந்துலா (Mundula - 16 நபர்கள்), ரெட்டி பாஷா (Reddy Bhasha - 23 நபர்கள்), வால்மீகி (Walmiki - 3 நபர்கள்), ஜதாப்பு (Jatapu - 19, 467 நபர்கள்). பொதுவாக இப்பெயர்கள் அனைத்தும் தென்னிந்தியாவில் வாழும் மக்களின் சாதிப் பெயர்களின் அடிப்படையில் தாய்மொழிப் பெயர்களாக வந்துள்ளன. பழங்குடிமக்களின் இனப்பெயர்கள் அவர்கள் பேசும் மொழிப்பெயர்களாகவும் வருவதைப் போல் இப்பெயர்களும் வந்துள்ளன.

### 1971ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு

1971ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பின் மொழிவாரி அறிக்கையில் இரண்டு மாற்றங்கள் செய்யப்பட்டன:

1. 10,000 அல்லது 10,000த்திற்கு மேல் உள்ள மக்களால் பேசப்படும் மொழிகள் மட்டுமே அறிக்கையில் சேர்க்கப்படும்.

2. வட்டார மொழித்திரிபுகள் (Regional Variants) எனும் ஒரு கோட்பாட்டையும் அறிமுகப்படுத்தியது. ஆனால் இந்த வட்டார மொழித் திரிபுகளுக்குரிய விளக்கங்கள் கொடுக்கப்படவில்லை. பல மொழிகளின் கீழ் அவைகளின் வட்டாரத்திரிபுகள் என்று சில பெயர்கள் கொடுக்கப்பட்டுள்ளன. இவ்வகை மொழிகளைப் பேசும் மக்கள் தொகைகள் அந்தந்த மொழியில் சேர்க்கப்பட்டிருக்கும் வட்டாரத்திரிபுகளைப் பேசும் மக்கள் தொகைகளையும் உள்ளடக்கியதாகும்.

3. திராவிட மொழிகளின் வட்டாரத்திரிபுகளாக அடையாளங் காணப்பட்டிருக்கும் தாய்மொழிகள் அந்தந்த மொழிகளோடு கொடுக்கப்பட்டுள்ளன:

| மொழி | - வட்டாரத்திரிபுகள் |
|---|---|
| கன்னடம் | - படகா (Badaga) |
| மலையாளம் | - எரவா (Yerava) |
| தமிழ் | - கைகடி, எருக்கலா (Kaikadi Yerukala) |
| தெலுங்கு | - வதாரி (Vadari) |
| கோண்டி (GONDI) | - டோர்லி, மாடியா, முடியா (Dorli, Maria, Muria) |
| கொண்டா (Konda) | - கொடு (Kodu) |
| பட்ஜி (Paraji) | - துர்வா (Dhurwa) |

1971ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் 10,000 அல்லது 10,000த்திற்கும் மேற்பட்ட மக்களால் பேசப்படும் மொழிகளாக 106 மொழிகள் பட்டியலிடப்பட்டுள்ளன. அவைகளில் கீழ்க்கண்ட 17 மொழிகள் திராவிட மொழிகளாகும்: கதபா (Catapa), கன்னடம், கிஸான் (Kisan), குடுக் அல்லது ஒரான் (Kurukh or Oraon), கூய் (Kui), கூர்கி அல்லது குடகு (Coorgi or Kodagu), கொண்டா (Konda), கோண்டி (Gondi), கோந்த் (Khond or Kondh), கோயா (Koya), கோலாமி (Kolami), தமிழ், துளு, தெலுங்கு, பட்ஜி (Parji), மலையாளம், ஜதாப்பு (Jatapu). இவைகளில் ஒரான் (Oraon) எனப்படுவது பழங்குடி மக்களின் இனப் பெயராகும். குடுக் (Kurukh) என்பது அவர்கள் பேசும் மொழியின் பெயராகும். அதேபோல் பட்ஜி மொழி பேசும் பழங்குடி மக்களின் இனப்பெயர் துர்வா (Dhurwa) ஆகும். மேலும் கோயா (Koya) பழங்குடியினர்களின் மொழி கோய் (Koi) என்றும் அழைக்கப்படுகிறது, ஜதாப்பு (Jatapu) என்று அழைக்கப்படும் பழங்குடியினர் பேசும் மொழி கூவி (Kuvi) என்றும் அழைக்கப்படுகிறது.

1971ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் வந்துள்ள மொழிகளின் மக்கள்தொகையை அடிப்படையாக வைத்து ஆர். சி. நிகாம் (R.C. Nigam) தமது மொழிகளின் கையேடு (Language Handbook) எனும் நூலில் 5000 அல்லது 5000த்திற்கு மேல் உள்ள மக்களால் பேசப்படும் மொழிகளைப் பின்னிணைப்பு 2இல் கொடுத்துள்ளார் (Nigam 1972: 333 - 340). அதில் கீழ்க்கண்ட 34 திராவிட மொழிகள் இடம் பெற்றுள்ளன. அவை அகரவரிசையில் வரிசைப்படுத்திக் கொடுக்கப்பட்டுள்ளன: இருளா/இருளிகா (Irula/Iruliga), எரவா (Yerava), எருக்கலா/எருக்குலா (Yerukala/Yerukula), கன்னடம், காலாடி (Kalari), கிஸான் (Kisan), குடுக்/ஓரான் (Kurukh/Oraon), குருபா/குரும்பா (Kuruba/Kurumba), கூர்கி/குடகு (Coorgi/Kodagu), கைகடி (Kaikadi), கொடு (Kodu), கோண்டி (Gondi), கோந்த் (Khond/Kondh), கோயா (Koya), கோலாமி (Kolami), டோர்லி (Dorli), தமிழ், துர்வா (Dhurwa), துளு, கூய் (Kui), தெலுங்கு, படகா (Badaga), பட்ஜி (Parji), பனியா (Pania), பாரியா (Bharia), மதராசி (Madarasi), மலையாளம், மாடியா (Maria), மால் பகாடியா (Mal Paharia), வதாரி (Vadari), ஜதாப்பு (Jatapu).

### 1981ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு

1981ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பிலும் 10,000 அல்லது 10,000த்திற்கு மேல் உள்ள மக்கள் தொகைகளைக் கொண்ட மொழிகள் மட்டுமே மொழிவாரி மக்கள் தொகை அறிக்கையில் இடம்பெற்றன. 1981ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு மொழிவாரி மக்கள்தொகை அறிக்கைகள் மூன்றுவிதமாகத் தயாரிக்கப்பட்டன.

1. தாய்மொழிகள் குறித்த அறிக்கை
   (Languages/ Mother tongues)
2. வீட்டு மொழிகள் குறித்த அறிக்கை
   (Household languages)
3. பழங்குடியினர்களின் தாய்மொழிகள்
   (Languages/ Mother toungus of the Scheduled Tribes)

தமிழகத்தில் எடுக்கப்பட்ட மக்கள்தொகைக் கணக் கெடுப்பு விவரத் தாள்கள் மழை வெள்ளத்தில் அடித்துச் சென்றுவிடப்பட்ட காரணத்தால் தாய்மொழிகள், மொழிகள் பற்றிய அறிக்கையில் தமிழகத்தின் மொழிவாரித் தகவல்கள் இடம்பெறவில்லை. மேலும் எல்லா அறிக்கைகளும் அரசு நிர்ணயித்திருந்த 10,000 எண்ணிக்கையைப் பின்பற்றியே

வெளியிடப்பட்டன. பழங்குடியினர் பேசும் மொழிகளுக்கென்று ஒரு தனி அறிக்கை முதன் முதலாக 1981ஆம் ஆண்டு மொழிவாரி அறிக்கையில் வெளியிடப்பட்டது. அந்த அறிக்கையிலும் 10,000 நபர்களுக்குக்கீழ்ப் பேசப்படும் பழங்குடியினர் மொழிகள் (Tribal Languages) இடம்பெறவில்லை. இத்தகைய மொழிகளைப் பற்றிய குறிப்பு வேண்டுமென்றால் "பிற மொழிகள்" (Others) என்று கொடுக்கப்பட்டிருக்கும் எண்ணிக்கையிலிருந்து ஒருவாறு அறிந்து கொள்ளவேண்டும். தற்போதைய சூழ்நிலையில் எண்ணிக்கையில் 10,000த்திற்குக் குறைவாக உள்ள மக்கள்தொகையைக் கொண்ட மொழிகளின் பெயர்களைத் தெரிந்து கொள்ள 1961ஆம் ஆண்டு மொழிவாரிக் கணக்கெடுப்பு அறிக்கையைத் தான் பார்க்க வேண்டிய சூழ்நிலை உள்ளது. 1981ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பின் மொழிவாரி மக்கள்தொகை அறிக்கையில் கீழ்க்கண்ட 18 திராவிட மொழிகளும் அவைகளின் வட்டாரத்திரிபுகளும் இடம்பெற்றுள்ளன. வட்டாரத்திரிபுகள் மொழிகளுடன் அடைப்புக்குறிக்குள் கொடுக்கப்பட்டுள்ளன: கதபா (Gadaba), கன்னடம் (படகா - Badaga), கிஸான் (Kisan), குடுக்/ஒரான் (Kurukh/Oraon), கூய் (Kui), கூர்கி/கொடகு, கொண்டா (Konda: கொடு - Kodu), கோண்டி (Gondi) (டோர்லி - Dorli, காண்ட/கண்டொ - Ganda/Gando, காலாடி - Kalari, மாடியா - Maria, முடியா - Muria), கோந்த் (Khond/Kondh), கோயா (Koya), கோலாமி, தமிழ் (அரவம் - Aravam, கைகடி - Kaikadi, எருக்கலா/எருக்குலா - Yerukala/Yerukula), துளு, தெலுங்கு (வதாரி - Vadari), பட்ஜி (Parji - Dhurwa), மலையாளம் (எரவா - Yerava), மால்தோ (Malto: பகாடியா - Pahariya), ஜதாப்பு (Jatapu).

### 1991ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு

1971ஆம் ஆண்டு, 1981ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்புகளின் மொழிவாரி அறிக்கைகளில் ஒரு மொழியின் வட்டாரத்திரிபு என அழைக்கப்பட்ட தாய்மொழிகளின் பெயர்கள் 1991ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பின் மொழிவாரி அறிக்கையில் தாய்மொழி (mother tongue) என்று அழைக்கப்பட்டு அம்மொழியின் கீழ்த் தனித்தனியாக அவற்றின் மக்கள்தொகைகள் கொடுக்கப்பட்டுள்ளன. ஆகையால் 1991ஆம் ஆண்டு மொழிவாரி அறிக்கையில் இந்தியாவில் பேசப்படும் 114 மொழிகள், 216 தாய்மொழிகள் (114 மொழிகள் உட்பட) பற்றிய தகவல்கள் கொடுக்கப் பட்டுள்ளன. இவைகளில் திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த 31 தாய்மொழிகள் (மொழிகள் உட்பட), 18 மொழிகளின் மக்கள்தொகைகள்

கொடுக்கப்பட்டுள்ளன. கதபா (Gadaba), கன்னடம் (படகா - Badaga), கிஸான் (Kisan), குடுக்/ஒரான் (Kurukh/Oraon), கூய் (Kui), கூர்கி/கொடகு, கொண்டா (Konda: கொடு - Kodu), கோண்டி (Gondi) (டோர்லி - Dorli, காண்ட/கண்டொ - Ganda/Gando, காலாடி - Kalari, மாடியா - Maria, முடியா - Muria), கோந்த் (Khond/Kondh: கூவி - Kuvi), கோயா (Koya), கோலாமி, தமிழ் (கைகடி - Kaikadi, எருக்கலா/எருக்குலா - Yerukala/Yerukula), துளு, தெலுங்கு (வதாரி - Vadari), பட்ஜி (Parji: துர்வா - Dhurwa), மலையாளம் (எரவா - Yerava), மால்தோ (Malto: பகாடியா - Pahariya), ஜதாப்பு (Jatapu). கூவி (Kuvi) எனும் திராவிடமொழி முதன் முதலாக 1991ஆம் ஆண்டு மொழிவாரி அறிக்கையில் கோந்த் (Khond/Kondh) மொழியின் தாய்மொழியாக (mother tongue) இடம் பெற்றுள்ளது. அரவம் என்ற தாய்மொழி தமிழ் மொழியுடனும், டோர்லி என்ற தாய்மொழி கோண்டி மொழியுடனும் 1981ஆம் ஆண்டு மொழி வாரி மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் இடம் பெற்றிருந்தன. 1991ஆம் ஆண்டு மொழிவாரி மக்கள்தொகைக் கணக்கெடுப்பு அறிக்கையில் இவை இடம்பெறவில்லை. 10,000 என்ற உச்ச வரம்பு (ceiling) அரசால் அறிமுகப்படுத்தப்பட்ட பின்பு ஒரே சீராக மொழி, தாய்மொழிகள் எல்லா மொழிவாரி அறிக்கைகளில் இடம்பெறுவதில்லை. இந்த உச்சவரம்பு பழங்குடி மக்கள் பேசும் மொழிகளை அதிகம் பாதித்துள்ளது. குறைவான எண்ணிக்கையில் உள்ள மக்களால் பேசப்படும் மொழிகளின் இருப்பிடமே தெரியாமல் மறைக்கப்பட்டுவிட்டது. படகா என்ற தாய்மொழி கன்னட மொழிக்கு 1981ஆம் ஆண்டு அறிக்கையில் இடம் பெறவில்லை. ஆனால் 1991ஆம் ஆண்டு அறிக்கையில் இடம்பெற்றுள்ளது.

### 2001ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு

2001ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பின் மொழிவாரி அறிக்கையில் இந்தியாவில் பேசப்படும் 122 மொழிகள், 234 தாய்மொழிகள் (mother tongues) ஆகியவை மக்கள்தொகைகளுடன் கொடுக்கப்பட்டுள்ளன. அவற்றில் திராவிட மொழிகளைச் சேர்ந்த 18 மொழி, 13 தாய்மொழி ஆகியனவும் அடங்கும். திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிகள், தாய்மொழிகள் கீழே கொடுக்கப் பட்டுள்ளன: கதபா (Gadaba), கன்னடம் (படகா - Badaga, குறுபா/குறும்பா - Kuruba/Kurumba), கிஸான் (Kisan), குடுக்/ஒரான் (Kurukh/Oraon), கூய் (Kui), கூர்கி/கொடகு, கொண்டா (Konda: கொடு - Kodu), கோண்டி (Gondi: டோர்லி - Dorli, காலாடி - Kalari, மாடியா - Maria, முடியா - Muria), ஜதாப்பு (Jatapu)), கோந்த் (Khond/Kondh),

கோயா (Koya), கோலாமி, தமிழ் (கைகடி - Kaikadi, எருக்கலா/ எருக்குலா - Yerukala/Yerukula), துளு, தெலுங்கு (வதாரி - Vadari), பட்ஜி (Parji: துர்வா - Dhurwa), மலையாளம் (எரவா - Yerava), மால்தோ (Malto: பகாடியா - Paharia).

2001ஆம் ஆண்டு மொழிவாரி அறிக்கையில் குறுபா/ குறும்பா எனும் தாய்மொழி கன்னட மொழியோடு முதன் முறையாகச் சேர்க்கப்பட்டுள்ளது. 1991ஆம் ஆண்டு மொழிவாரி அறிக்கையில் கோண்டி மொழியின் தாய்மொழியாக இடம் பெறாத டோர்லி (Dorli) மீண்டும் 2001ஆம் ஆண்டு அறிக்கையில் இடம்பெற்றுள்ளது. மேலும் 1981, 1991, 2001 ஆண்டு மொழிவாரி அறிக்கைகளில் கதபா (Gadaba) மொழி ஆஸ்ட்ரோ - ஆசியாடிக் (Austro - Asiatic) மொழிக்குடும்ப மொழியாகக் கொடுக்கப் பட்டுள்ளது. ஆனால் கதபா எனும் பழங்குடியினர் கதபா எனும் திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழியையும், குதொப் (Gutob) என்ற ஆஸ்ட்ரோ - ஆசியாடிக் மொழிக் குடும்பத்தின் முண்டா பிரிவைச் சேர்ந்த மொழியையும் பேசும் மக்களாக உள்ளனர். மக்கள்தொகைக் கணக்கெடுப்பு அறிக்கைகளில் கதபா (Gadaba), குதொப் (Gutob) என்று தனித் தனியாக அழைக்கப்படாமல் கதபா என்று இரண்டையும் ஒன்றாகச் சேர்த்தே அழைக்கப்படுவதால் கதபா என்பதைத் திராவிட மொழியாகவும் எடுத்துக்கொள்ள வேண்டியதுள்ளது.

1951, 1961, 1971ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக் கெடுப்பு மொழிவாரி அறிக்கைகளில் பதிவுசெய்யப்பட்டுள்ள மொழிகள், தாய்மொழிகளின் பெயர்கள் அட்டவணை 2இல் கொடுக்கப்பட்டுள்ளன. 1981, 1991, 2001ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்பு மொழிவாரி அறிக்கைகளில் பதிவு செய்யப்பட்டுள்ள மொழிகள், தாய்மொழிகளின் பெயர்கள் அட்டவணை 3இல் கொடுக்கப்பட்டுள்ளன. 1981ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் வெளியிடப்பட்டுள்ள பழங்குடியினர்கள் பேசும் மொழிகளின் தகவல்கள் அட்டவணை 4இல் கொடுக்கப்பட்டுள்ளன.

ஒட்டுமொத்தமாக இந்தியில் பேசப்படும் மொழிகளை அறிந்துகொள்ள உதவுவது கிரியர்சனின் அளவாய்வும் மக்கள் தொகைக் கணக்கெடுப்புகளும் ஆகும். இவைகளில் கிரியசர்னின் அளவாய்விற்குப் பின் இன்றுவரை எந்த அளவாய்வும் மொழி களிலிருந்து பெறப்படும் தரவுகள் அடிப்படையில் நடத்தப்பட வில்லை. மக்கள்தொகைக் கணக்கெடுப்புகளின் மொழிவாரி அறிக்கைகளில் மொழிகளின் பெயர்களும் அவைகளைப் பேசும்

மக்கள்தொகையும் கொடுக்கப்படுகின்றன. மொழிகளின் தன்மையை உறுதி செய்வதற்கு அம்மொழிகளின் மாதிரித் தரவுகள் (language specimen) கொடுக்கப்படுவதில்லை. மேலும் மக்கள்தொகை மொழிவாரி அறிக்கைகளில் தற்காலத்தில் நடத்தப்பட்ட ஆய்வுகளின் அடிப்படையில் மொழிகளின் நிலை உறுதி செய்யப்படுவதில்லை.

1931ஆம் ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பு வரை மொழிவாரி அறிக்கைகளில் எத்தனை மொழிகள், எத்தனை கிளைமொழிகள் இந்தியாவில் பேசப்படுகின்றன என்பது பற்றிய தகவல்கள் கொடுக்கப்பட்டன. 1951ஆம் ஆண்டு மொழிவாரி அறிக்கையில் அனைத்துப் பெயர்களும் இந்தியாவில் பேசப்படும் மொழிகள் என்று அறிக்கையில் கூறப்பட்டுள்ளது. 1961ஆம் ஆண்டு அறிக்கையில் மொழி, தாய்மொழி (mother tongue) என்று வகைப்படுத்தப்பட்டுக் கொடுக்கப்பட்டுள்ளன. 1971, 1981ஆம் ஆண்டுக்கான மக்கள்தொகை மொழிவாரிக் கணக் கெடுப்புகளில் ஒவ்வொரு மொழியின் வட்டாரத்திரிபுகள் (Regional Variants) கொடுக்கப்பட்டாலும் வட்டாரத்திரிபுகளின் மக்கள்தொகைகள் தனித்தனியாகக் கொடுக்கப்படவில்லை. 1991ஆம் ஆண்டு மொழிவாரி அறிக்கையில் மீண்டும் ஒட்டு மொத்தமாக மொழிகள் என்ற தலைப்பில் மொழிகளைப் பேசும் மக்கள்தொகை கொடுக்கப்பட்டுள்ளது. மேலும் 1961ஆம் ஆண்டு அறிக்கையைப்போல் மொழி, தாய்மொழி என்று பாகுபடுத்தப்பட்டு ஒவ்வொரு மொழியின் தாய்மொழிகளும் அந்த மொழியின்கீழ்ப் பட்டியலிடப்பட்டு மொழி, தாய்மொழி பேசுபவர்களின் எண்ணிக்கைகள் தனித்தனியாகவும் கொடுக்கப் பட்டுள்ளன. இந்திய மக்கள்தொகைக் கணக்கெடுப்புகளில் இந்தியாவில் பேசப்படும் எல்லா மொழிகளைப் பற்றிய தகவல்களைக் கொடுப்பதற்குரிய முயற்சிகள் செய்யப்பட்டாலும் இதுவரை எந்த மக்கள்தொகைக் கணக்கெடுப்பும் இந்தியாவில் பேசப்படும் மொழிகளை முழுமையாகப் பட்டியலிடவில்லை என்றே கூறவேண்டும். இந்தியாவில் பேசப்படும் திராவிட மொழிகளுக்கும் இது பொருந்தும்.

2001ஆம் ஆண்டு மக்கள்தொகை மொழிவாரி அறிக்கையில் கதபா (Gadaba) மொழி 26,262 நபர்களால் பேசப்படுவதாகக் கூறப்பட்டுள்ளது. இவைகளில் பெரும்பாலானோர் ஒடிசா (Orissa - 15,126 நபர்கள்), ஆந்திரப்பிரதேசம் (Andhra Pradesh - 10,782 நபர்கள்) ஆகிய இரு மாநிலங்களில் வாழ்கின்றனர் (2001 மொழிவாரி மக்கள்தொகை:51). அதே அறிக்கையில் (பக்.29)

கதபா ஆஸ்ட்ரோ - ஆசியாடிக் (Austro - Asiatic) மொழி என்று அம்மொழிகளுடன் பட்டியலிடப்பட்டுள்ளது. ஆனால் கதபா என்பது ஒரு பழங்குடிமக்களின் இனப்பெயராகும். அவர்கள் பேசும் மொழிகளில் கதபா (Gadaba) திராவிட மொழிக் குடும்பத்தையும், குதொப் (Gutob) முண்டா பிரிவைச் (Munda group) சேர்ந்த ஆஸ்ட்ரோ - ஆசியாடிக் (Austro - Asiatic) மொழிக்குடும்பத்தையும் சேர்ந்தவைகளாகும். ஒரே இனத்தைச் சேர்ந்த பழங்குடியினர் இருவேறு மொழிக்குடும்பங்களைச் சேர்ந்த இருவேறு மொழிகளைப் பேசுபவர்களாக இருப்பதற்குக் கதபா பழங்குடியினர் உதாரணமாக உள்ளனர். இவர்கள் பேசும் மொழிகள் பண்பாட்டு அடிப்படையில் இவர்களை வேறு படுத்திக் காட்டுகின்றன. கதபா பழங்குடியினர்களின் மொழிகளின் நிலையைப்பற்றிக் கூறும் பொழுது பிஎச். கிருஷ்ணமூர்த்தி (1969: 310) 1951, 1961ஆம் ஆண்டு மக்கள் தொகைக் கணக்கெடுப்புகளில் கதபா பழங்குடியினர் பேசும் இருமொழிகளையும் வேறு படுத்திக் காட்டப்படவில்லை. மேலும் திராவிட மொழியைப் பேசும் கதபா பழங்குடிப் பிரிவினர் தங்களைக் கொண்டேகோர் கதபா (Kondekor Gadaba) என்று அழைக்கின்றனர். இவர்கள் ஆந்திர மாநிலம் ஸ்ரீகாகுளம் (Srikakulam) மாவட்டத்தில் பெரும்பாலும் வாழ்கின்றனர். 1961 ஆண்டு மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் ஆந்திராவில் வாழும் கதபா பழங்குடியினர் 8,401 நபர்கள் எனக் குறிப்பிடப்பட்டிருப்பது கொண்டேகோர் கதபா மக்களையே குறிக்கும் என்கின்றார்[23]. 1961ஆம் ஆண்டு மொழிவாரிக் கணக்கெடுப்பு அறிக்கையில் கதபா பழங்குடி யினர் பேசும் இருமொழிகளைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருந் தாலும் (பக். clxxx, clxxxi) மொழிகளைப் பட்டியலிடும் பொழுது கதபா மொழி ஆஸ்ட்ரோ - ஆசியாடிக் மொழியாகவே கருதப்பட்டுள்ளது. கதபா பழங்குடியினர் பேசும் குதொப் (Gutob) மொழி மட்டும் ஆஸ்ட்ரோ - ஆசியாடிக் மொழியைச் சேரும் என்கின்றார் நார்மன் சைடு (Norman Zide - 1969: 412) எனும் மொழியறிஞர். சுதிபூசன் பட்டாசார்யா (Sudhibhushan Bhattacharya) 1957இல் வெளியிட்ட ஒல்லாரி - ஒரு திராவிட மொழி (Ollari - a Dravidian language) எனும் நூலில் (பக்.2) கதபா மொழியானது உண்மையில் மோடு அல்லது போடொ கதபா (Modo or Bodo Gadaba) மக்களால் பேசப்படும் குதொப் (Gutob) மொழியாகும். இவர்கள் தங்களைக் குதொப் என்றும் அழைக்கின்றனர். இவர்களும் ஒடிசா (Orissa) மாநிலத்திலுள்ள கொராபுத் (Koraput) மாவட்டத்தில் வாழும் ஒல்லார் (Ollar) பிரிவினரும் ஆந்திர மாநிலம் ஸ்ரீகாகுளம் (Srikakulam) மாவட்டம்

சாலூர் (Salur) வட்டத்தில் வாழும் போயா (Poya) எனப்படும் பிரிவினரும் திராவிட மொழியைப் பேசுபவர்கள். இரு மொழிகளைப் பேசுபவர்களும் சேர்ந்துதான் கதபா எனும் இனமாக அழைக்கப்படுகின்றனர்[24]. ஆனால் மக்கள்தொகைக் கணக்கெடுப்பு மொழிவாரி அறிக்கைகளில் இவ்விரண்டு மொழிகளும் இன்றுவரை வேறுபடுத்திக் காட்டப்படவில்லை.

2001ஆம் ஆண்டு மக்கள்தொகை மொழிவாரி அறிக்கையில் பொரஜா (Poraja) எனும் தாய்மொழி (mother tongue - 92,774 நபர்கள்) ஒரியா மொழியின்கீழ்ப் பட்டியலிடப் பட்டுள்ளது (பக்.13). மேலும் பட்ஜி எனும் மொழியும் (51,216 நபர்கள்) தனியாகக் கொடுக்கப்பட்டுள்ளது (பக்.75). இம் மொழி பேசும் மக்கள் ஒடிசா (Odissa) மாநிலத்திலும் (10,310 நபர்கள்), சத்திஸ்கட் (Chhattisgarh) மாநிலத்திலும் (39,498 நபர்கள்) அதிக அளவில் வாழ்கின்றனர். பட்ஜி திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழியாகும். பொதுவாகப் ப்ரொஜா (Proja), ப்ரஜா (Praja), பரஜா (Paraja), பொரஜா (Poraja) ஆகிய சொற்கள் சமஸ்கிருதச் சொல்லாகிய ப்ரஜா (praja-'people') எனும் சொல்லில் இருந்து உருவானவை. இச் சொற்கள் அந்தப் பகுதியைச் சேர்ந்த பூர்வீகப் பழங்குடியினர் எனும் பொருளில் பழங்குடியினரல்லாத மக்களால் கீழ்க்கண்ட பல பழங்குடியினரை அழைக்கப் பயன்படும் பொதுச் சொல்லாகும்: போண்டொ பரஜா (Bondo Paraja), கொண்டா பரஜா, (Konda Paraja), டிடய் பரஜா (Didayi Paraja), பாடு பரஜா (Bad Paraja), ஜாரியா பரஜா (Jharia Paraja) (தாஸ்குப்தா & பட்டாச்சார்யா, 1975: 6) இவர்கள் தவிர, துர்வா (Dhurwa) எனப்படும் பழங்குடியினரும் துர்வா பரஜா (Dhurwa Paraja) என்று அழைக்கப்படுகின்றனர். இவர்கள் பேசும் மொழி மட்டும்தான் பட்ஜி (Parji) மொழி என்று அழைக்கப்படுகிறது. மேலும் பெங்கோ (Pengo) அல்லது ஜானி (Jani) என்று அழைக்கப்படும் பழங்குடியின மக்களும் பரஜா அல்லது பொரஜா என்று அழைக்கப்படுகின்றனர் (பர்ரோ & பட்டாச்சார்யா, Burrow and Bhattacharya, 1970). பட்ஜி எனும் சொல்லும் சமஸ்கிருதச் சொல்லாகிய ப்ரஜா - (praja-'people') எனும் சொல்லிலிருந்து உருவாகிய சொல்லாகும். பரஜா, பொரஜா என்ற சொற்களால் அழைக்கப்படும் ஏழுவகைப் பழங்குடியினரில் போண்டோ பரஜா (Bondo Paraja), டிடய் பரஜா (Didayi Paraja) ஆகிய இருபழங்குடியினரும் முறையே போண்டோ (Bondo), டிடய் (Didayi) எனும் முண்டா பிரிவைச் சேர்ந்த ஆஸ்டரோ - ஆசியாடிக் மொழிகளைப் பேசுபவர்கள். பாடு பரஜா (Bad Paraja), ஜாரியா பரஜா (Jharia Paraja) ஆகிய இரு

பழங்குடியினரும் இந்தோ - ஆரிய (Indo - Aryan) மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த ஒரியா மொழியின் வட்டாரத்திரிபான தேசியா ஒரியாவைத் (Desiya Oriya) தாய்மொழியாகக் கொண்டவர்கள். கொண்டா (Konda) பழங்குடிமக்கள் பேசும் கொண்டா அல்லது கூபி (Konda or Kubi) எனப்படும் மொழியும் கோண்டி பழங்குடி வகுப்பைச் சேர்ந்த துர்வா (Dhurwa) பழங்குடி மக்கள் பேசும் பட்ஜி மொழியும் கோந்த் பழங்குடி வகுப்பைச் சேர்ந்த பெங்கோ பர்ஜா அல்லது ஜானி (Pengo Parja or Jani) என்றழைக்கப்படும் பழங்குடியினர் பேசும் பெங்கோ (Pengo) மொழியும் திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளாகும். எனவே பரஜா அல்லது பொரஜா எனும் பொதுச் சொல்லில் அழைக்கப்படும் இந்த ஏழு பழங்குடியினர் இந்தோ - ஆரிய, திராவிட, ஆஸ்ட்ரோ - ஆசியாடிக் ஆகிய மூன்று மொழிக்குடும்பங்களைச் சேர்ந்த மொழிகளைப் பேசும் ஏழு வகையான பழங்குடி மக்களாவர். எனவே ஒரியா மொழியின் தாய்மொழியாகக் காட்டப்பட்டிருக்கும் ப்ரொஜா (Proja) எனும் தாய்மொழியில் இந்த வேறுபட்ட பழங்குடியினரின் வேறுபட்ட மொழிகள் எந்த அளவிற்குத் தனித் தனியாகக் கையாளப்பட்டுள்ளன என்பது ஒரு கேள்விக்குறியாகும்.

பொர்ஜா அல்லது பர்ஜா என்று அழைக்கபடும் பலதரப்பட்ட பழங்குடி மக்களின் நிலைதான் கோந்த் (Khond or Kondh), குறும்பர் (Kurumba) என அழைக்கப்படும் பழங்குடிமக்கள் பேசும் மொழிகளின் நிலைகளாகவும் உள்ளது. 2001ஆம் ஆண்டு மொழிவாரி அறிக்கையில் கோந்த் (Khond or Kondh) மொழி 118,597 மக்களால் (பக்.15) பேசப்படுவதாகவும், கூய் (Kui) மொழி 916,222 மக்களால் பேசப்படுவதாகவும் (பக்.15), ஜதாப்பு (Jatapu) மொழி 39,331 மக்களால் பேசப்படுவதாகவும் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஆனால் 1991ஆம் ஆண்டு மொழிவாரி அறிக்கையில் கோந்த் மொழியின் தாய்மொழிகளில் ஒன்றாகக் கொடுக்கப்பட்ட கூவி (Kuvi - 22, 450 நபர்கள்) என்ற மொழி (பக்.14) 2001ஆம் ஆண்டு அறிக்கையில் இடம்பெறவில்லை. மேலும் ஜதாப்பு என்று மொழிவாரி அறிக்கைகளில் வரும் பெயர் ஒரு பழங்குடி மக்களின் இனப்பெயராகும், மொழிப் பெயரன்று. கோந்த் என்று பொதுவாக அழைக்கப்படும் பழங்குடி மக்கள் மண்டா (Manda), பெங்கோ (Pengo), இந்தி அல்லது ஆவே (Indi or Awe), கூய் (Kui), கூவி (Kuvi) என்று பல மொழிகளைப் பேசும் மக்களைக் குறிப்பனவாகும். ஆனால் இம்மொழிகளில் மண்டா, பெங்கோ, இந்தி/ஆவே போன்ற

மொழிகள் மொழிவாரி அறிக்கைகளில் இன்றுவரை ஒரு மொழியாகவோ அல்லது ஒருமொழியின் தாய்மொழி யாகவோ அல்லது வட்டாரத்திரிபாகவோ இடம்பெற்றதில்லை. ஆனால் இவை அத்தனையும் மொழியறிஞர்களால் கள ஆய்வுகள் மூலம் உறுதிப்படுத்தப்பட்ட மொழிகளாகும். மண்டா எனும் மொழி கோந்த் பழங்குடியினரில் ஒரு பிரிவினரால் ஒடிசா மாநிலம் காலஹண்டி (Kalahandi) மாவட்டத்தில் பேசப்படும் மொழியாகும் (இராமகிருஷ்ண ரெட்டி, 1982). இந்தி/ஆவே என்று அழைக்கப்படும் மொழி ஒடிசா மாநிலம் கொராபுத் மாவட்டத்தின் காசிப்புரா (Kashipura) வட்டத்திலும் கால ஹண்டி மாவட்டத்தின் கோபால்பூர் (Gopalpur) பகுதிகளிலும் வாழும் கோந்த் பழங்குடியினரின் ஒரு பிரிவினரால் பேசப்படும் மொழியாகும் (சுப்ரமண்யம், 1987:22). பெங்கோ (Pengo) மொழி பேசுபவர்கள் ஒடிசா மாநிலம் கொராபுத் மாவட்டத்தின் நவ்ரங்பூர் (Nowrangpur) பகுதிகளிலும், காலஹண்டி மாவட்டத்தை ஒட்டியுள்ள தசமந்த்பூர் (Dasamantpur) பகுதி களிலும் வாழ்கின்றனர் (பர்ரோ & பட்டாச்சார்யா, 1970: ii). கூவி (Kuvi) மொழிபேசும் மக்கள் ஒடிசா மாநிலம் கொராபுத் (Koraput), கஞ்சம் (Ganjam), புல்பானி (Phulbani) ஆகிய மாவட்டங்களில் வாழ்கின்றனர் (இஸ்ரேல், 1997: 123). கூய் (Kui) மொழி பேசும் மக்கள் தங்களைக் கூய்ங்கா என்று அழைக்கின்றனர். இவர்கள் பேசும் மொழியும் கோந்த் (Khond) அல்லது கந்த் (Khand) என்று அழைக்கப்படுகிறது (வின்பீல்டு - Winfield, 1928: xiii). எனவே, கோந்த் அல்லது கந்த் எனும் பொதுச்சொல்லில் கூய், கூவி, பெங்கோ, இந்தி/ஆவே, மண்டா ஆகிய ஐந்து திராவிட மொழிகள் பேசும் பழங்குடியின மக்கள் அடங்குவர். ஆனால் 2001ஆம் ஆண்டு மொழிவாரி அறிக்கையில் கூய், கோந்த் மொழிகள் மட்டுமே இடம்பெற்றுள்ளன. 1991ஆம் ஆண்டு மொழி அறிக்கையில் கோந்த் மொழியின் தாய் மொழியாக இடம் பெற்ற கூவி (Kuvi) மொழி 2001ஆம் ஆண்டு அறிக்கையில் இடம்பெறவில்லை.

தமிழகத்தின் நீலகிரி மாவட்டத்திலும் அதன் அருகாமையில் உள்ள கர்நாடகம், கேரளம் ஆகிய மாநிலங் களின் எல்லையோர மாவட்டங்களிலும் வாழும் பழங்குடியின மக்களின் மொழிகளும், பொதுப் பெயரிலும், தனித்தனிப் பழங்குடியினர்களின் பெயர்களிலும் அழைக்கப்படுகின்றன. தோடா, கோட்டா ஆகிய இரு பழங்குடியினர்களின் மொழிகள் உறுதிசெய்யப்பட்டவை. ஆனால் குறும்பர், இருளர் போன்ற பழங்குடியினர் பேசும் மொழிகள் இதுவரை பல மொழியியல்

அறிஞர்களால் ஆய்வுகள் செய்யப்பட்டிருப்பினும் அவைகள் இன்றுவரை மொழிவாரி கணக்கெடுப்பில் அங்கிகாரம் செய்யப் படவில்லை. மேலும் இவ்வாய்வுகள் திராவிட மொழிகளின் ஒப்பாய்வுகளிலும் (comparative studies) சொல்வரலாற்று ஆய்வுகளிலும் (etymological studies) முழுமையாகப் பயன் படுத்தப்படவில்லை என்றே கூற வேண்டும்.

குறும்பர்கள் எனும் பழங்குடியினர் நீலகிரி மாவட்டத் திலும் அதன் அருகாமையில் உள்ள பிற மாவட்டங்களிலும் வசிக்கின்றனர். இவர்கள் குறும்பர் என்று ஒரு பொதுப் பெயரில் அழைக்கப்பட்டாலும் இவர்களில் கீழ்க்கண்ட ஐந்து உட்பிரிவுகள் உள்ளன. இவ்வுட்பிரிவுகளைச் சேர்ந்தவர்கள் அவர்களுடைய உட்பிரிவு தவிர வேறு உட்பிரிவுகளில் திருமண உறவுகள் வைத்துக் கொள்வதில்லை. எனவே ஒவ்வொரு உட்பிரிவும் ஒரு தனி இனம் போன்றே சமூகத்தில் அங்கம் வகிக்கின்றன.

1. ஆலுக்குறும்பர்/பாலுக்குறும்பர் - Ālu Kuṟumbar/Pālu Kuṟumbar
2. முள்ளுக்குறும்பர் - Muḷḷukkuṟumbar
3. பெட்ட குறும்பர்/காடு குறும்பர் - Beṭṭa Kuṟumba/Kāṭu Kuṟumbar
4. ஜேனுக்குறும்பர்/தேனுக்குறும்பர்/காட்டு நாயக்கர் - Jēnu Kuṟumbar/Tēnu Kuṟumbar/Kāṭṭunāyakkar
5. ஊராளிக்குறும்பர் - Urāḷi Kuṟumbar

குறும்பர் எனும் பெயரில் இவ் ஐந்து வகைப் பழங்குடி மக்கள் தவிரக் குறுபர் (Kuṟubar/Kuṟuba) எனும் ஆடு மேய்த்து வாழும் ஒரு சாதியினரும் உள்ளனர். இவர்கள் கர்நாடக மாநிலத்திலும் தமிழகத்திலும் வாழ்கின்றனர். இவர்களது தாய்மொழி கன்னடமாகும். மேற்கூறப்பட்ட குறும்பர் இனப் பழங்குடியினர்களின் மொழிகளை ஆய்வு செய்த மொழியியல் அறிஞர்கள் பலர் ஆலுக்குறும்பர்/பாலுக்குறும்பர், பெட்ட குறும்பர்/காடு குறும்பர், ஜேனு குறும்பர்/தேன் குறும்பர்/காட்டு நாயக்கர் ஆகிய பழங்குடியினர் பேசும் மொழிகளைத் தனித்தனி மொழியெனக் கூறியுள்ளனர். (B. Dieter Kapp, *1978;* Kamil Zvelebil, *1981, 1982, 1988;* S. Natanasaphapathy, *1981, 1986).* ஆனால் மொழிவாரி மக்கள்தொகைக் கணக்கெடுப்புகளில் இவர்கள் பேசும் மொழிகள் பதிவு செய்யப்படவில்லை. 1961ஆம் ஆண்டு மொழிவாரிக் கணக்கெடுப்பு அறிக்கையில் கன்னட மொழியின் கீழ்க் குறுபா கன்னடா (Kuruba Kannada - *8, 798* நபர்கள்) என்று ஒரு தாய்மொழி பதிவு செய்யப்பட்டுள்ளது. பின்னர் 2001ஆம் ஆண்டு அறிக்கையில்தான் குறுபா/குறும்பா

(14,613 நபர்கள்) எனும் பெயரில் கன்னட மொழியின் தாய் மொழிகளில் (mother tongue) ஒன்றாகப் பதிவு செய்யப் பட்டுள்ளது. ஆனால் இவர்களது உட்பிரிவினர்கள் பேசும் மொழிகள் எதுவும் தனித்தனியாகப் பதிவு செய்யப்படாமல் குறும்பர் என்ற பொதுப் பெயரிலேயே பதிவு செய்யப்பட்டுள்ளது. அதேபோல் படகர்கள் (Badagas) பேசும் மொழியும் கன்னட மொழியின் தாய்மொழிகளில் ஒன்றாகவே மொழிவாரி அறிக்கைகளில் பதிவுசெய்யப்பட்டுள்ளது. ஆனால் அது ஒரு தனிமொழி என்று தற்பொழுது கருதப்படுகிறது (பால கிருஷ்ணன், 1999)[25].

நீலகிரி மாவட்டத்தில் வாழும் இருளர் பழங்குடி மக்களிடம் கீழ்க்கண்ட நான்கு உட்பிரிவுகள் உள்ளன: மேலைநாடு இருளர் (Mēle Nāṭu Iruḷar), வேட்டைக்காடு இருளர் (Vēṭṭe Kāṭu Iruḷar), ஊராளி அல்லது ஊராளி இருளர் (Ūrāḷi or Ūrāḷi Iruḷar), கசபா/கசவா/கசுபா/கசபா இருளர் (Kasaba or Kasava or Kasuba or Kasaba Iruḷar). இருளர் பழங்குடியினர் பேசும் மொழி தனி மொழி என்று ஆர். பெரியாழ்வார், டிப்லாத் (Diffloth), கமில் சுவலபில் (Kamil Zvelebil) ஆகிய அறிஞர்கள் தங்களது ஆய்வுகளில் தெரிவித்துள்ளனர். இந்த மொழி மேலை நாடு இருளர், வேட்டைக்காடு இருளர் பேசும் பேச்சு வழக்குகளை அடிப்படையாகக் கொண்டது (Zvelebil, 1982). இருளர் பழங்குடிமக்களின் ஒருபிரிவினராகக் கருதப்படும் கசபா/கசுபா/கசபா இருளர் பேசும் மொழியும் தனிமொழியாகக் கருதப் படுகிறது (சிதம்பரநாத பிள்ளை, 1978). ஆக இருளர் பழங்குடியினரும் இருளர், கசபா ஆகிய இருமொழிகளைப் பேசும் மொழிப்பிரிவினராக உள்ளனர். ஆனால் தமிழ்நாடு - கர்நாடகம் எல்லையோரப் பகுதிகளில் வாழும் ஊராளி பழங்குடியினர் பேசும் மொழி கன்னட மொழியின் கிளை மொழியாகும். மேலும் சோலகர் (Sholagas) பேசும் மொழியும் கன்னட மொழியின் கிளைமொழியன்று, தனியொரு மொழி என்று கருதப்படுகிறது (Zvelebil, 1990).

# திராவிட மொழி ஆய்வுகள்

எல்லீஸால் (Ellis - *1816*) ஏழு மொழிகளுடன் தனியொரு மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழிகள் என்று கருதப் பட்டதைக் கால்டுவெல் (1856) 12 மொழிகளுடன் திராவிட மொழிக்குடும்பம் என்ற ஒரு தனி மொழிக்குடும்பத்தை நிறுவினார். முர்ரே பி. எமனோ (Murrey B. Emeneau) நீலகிரி மலைவாழ் தோடர்கள், கோத்தர்கள், குடவர்கள் (கூர்கி) பேசும் மொழிகளை 1930ஆம் ஆண்டிலிருந்து ஆய்வுகள் மேற்கொண்டார். பின்னர் மத்திய இந்தியாவில் பேசப்படும் கோலாமி மொழியையும் ஆராய்ந்தார். தாமஸ் பர்ரோ (Thomas Burrow), சுதிபூசன் பட்டாசார்யாவுடன் (Sudhibhushan Bhattacharya) இணைந்து மத்தியப்பிரதேசம், ஆந்திரப்பிரதேசம், ஒடிசா ஆகிய மாநிலங்களில் வாழும் பழங்குடியினர்களிடம் கள ஆய்வு செய்து அதன் மூலம் கொண்டா, முடியா, கோண்டி, குவி, கதபா, பட்ஜி, நாயக்கி/நாய்கி, பெங்கோ, மண்டா, ஒல்லாரி போன்ற மொழிகளை ஆராய்ந்து அவை திராவிட மொழிகள் என்று நிரூபித்தார். பீகார், மேற்குவங்கம் ஆகிய மாநிலங்களில் பேசப் படும் குடுக், மால்தோ போன்ற மொழிகளும் ஆந்திரப்பிரதேசம், ஒடிசா மாநில எல்லைப்பகுதிகளில் வாழும் கோந்த் பழங்குடி யினர்களால் பேசப்படும் கூய், கூவி போன்ற மொழிகளும் திராவிட மொழிகளாக அடையாளம் காணப்பட்டன. பல திராவிட மொழிகள் பேசும் பழங்குடியினர்களிடம் கள ஆய்வு செய்து பல திராவிட மொழிகளை மொழியியல் அறிஞர்கள் அடையாளங்கண்டு கொண்டதன் விளைவாகத் திராவிட மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளின் எண்ணிக்கையும் அதிகரிக்கத் தொடங்கிற்று. தாமஸ் பர்ரோவும், முர்ரே பி. எமனோவும் இணைந்து திராவிட மொழிச் சொற்களை ஆராய்ந்து 1961ஆம் ஆண்டு திராவிட மொழிச் சொல்லாய்வு அகராதியை (Dravidian Etymological Dictionary) வெளியிட்டனர். இதில் 18 திராவிட மொழிகளின் சொற்கள் கொடுக்கப் பட்டுள்ளன: கதபா, கன்னடம், குடுக், கூய், கூவி, கொடகு, கொண்டா, கோட்டா, கோண்டி, கோலாமி, தமிழ், துளு, தெலுங்கு, தோடா, பட்ஜி, பிராஹுய், மலையாளம், மால்தோ. மேற்கூறிய அகராதியின் தொடர்ச்சி (Dravidian Etymological Dictionary: Supplement) 1968ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது.

அதில் மேலும் மூன்று மொழிகள் சேர்க்கப்பட்டன: நாய்கி (Naiki of Chanda), பெங்கே (Pengo), மண்டா (Manda). அந்த அகராதியின் மறுபதிப்பு 1984ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. அதில் மேலும் நான்கு மொழிகள் சேர்க்கப்பட்டன: இருளா, குறும்பா (பாலு, ஆலு கிளைமொழிகள்), கொரகா (Koraga), பேலாரி (Belari). திராவிட மொழிகளின் எண்ணிக்கை 1984ஆம் ஆண்டு வெளிவந்த அகராதியின்படி 34 ஆகும்: ஆலு குறும்பா, இந்தி/ஆவே, இருளா, கசபா, கதபா, கன்னடம், குடுக்/ஒரான், குறும்பா, கூய், கூவி/கோந்த், கொடகு/கூர்கி, கொண்டா/ கூபி, கொரக, கோட்டா, கோண்டி, கோயா/கோய், கோலாமி, தமிழ், துளு, தெலுங்கு, தோடா, நாய்கி (Naiki), படகா, பட்ஜி, பாலு குறும்பா, பிராஹுய், பெங்கோ, பெட்ட குறும்பா, பேலாரி, மண்டா, மலையாளம், மால்தோ, முள்ளு குறும்பா, ஜேனு குறும்பா/காட்டு நாயக்கா.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வுகளாகக் கசபா, காட்டு நாயக்கா, காடர், பனியா, தோடா, கோட்டா, இருளா, பெட்ட குறும்பா, சோலை நாயக்கா, நாய்க்டி ஆகிய பல திராவிட மொழிகள் ஆய்வு செய்யப் பட்டுள்ளன. அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியர்கள் சிலர் கோண்டி, எருக்கலா போன்ற திராவிட மொழிகளையும் மதுரைப் பல்கலைக் கழகப் பேராசிரியரால் கூய், கூவி மொழிகளும் கேரளப் பல்கலைக் கழகத்தின் மொழியியல் துறையில் முதுவா, அடியன், காணிக்காரன், மலப்பண்டாரம், வேட்டுவர் போன்ற பல பழங்குடியினரின் மொழி அல்லது பேச்சுவழக்கு ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. பூனா பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டெக்கான் கல்லூரியில் (Deccan College, University of Poona) கொரகா, கொண்டேகோர் கதபா, குடுக், துளு போன்ற மொழிகள் ஆய்வுசெய்யப்பட்டுள்ளன. உஸ்மானியா பல்கலைக் கழகத்தில் (Osmania University, Hyderabad) கோண்டி, மண்டா, இந்தி/ஆவே போன்ற மொழிகளில் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இந்திய மானிடவியல் அளவாய்வு நிறுவனத்தில் (Anthropological Survey of India, Kolkatta) ஒல்லாரி, கொண்டா மொழிகளும் தெலுங்கு மொழி பேசும் செஞ்சு பழங்குடியினரின் பேச்சுவழக்கும் ஆராயப்பட்டுள்ளன. இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம் (Central Institute of Indian Languages, Mysore) மால்தோ, கூவி, மாடியா, மண்டா போன்ற திராவிட மொழிகளை ஆராய்ந்துள்ளது. பிஎச். கிருஷ்ணமூர்த்தி (2003) தம்முடைய திராவிட மொழிகள் எனும் நூலில் நாய்க்டி, நாய்கி, ஒல்லாரி, கதபா ஆகிய மொழிகளைத் தனித்தனி

மொழிகளாகக் கொடுத்துள்ளார். மனோகரன் (2001:92) திராவிட மொழிகளின் ஆய்வுத் தரவுகளை அடிப்படையாகக் கொண்டு கீழ்க்கண்ட 30 மொழிகளைத் திராவிட மொழிகள் எனப் பட்டியலிட்டுள்ளார்: இந்தி/ஆவே, இருளா, கசபா, கதபா, கன்னடம், குடுக்/ஒரான், குறும்பா, கூய், கூவி/கோந்த், கொடகு, கொண்டா அல்லது கூபி, கொரகா, கோட்டா, கோண்டி, கோயா, கோலாமி, தமிழ், துளு, தெலுங்கு, தோடா, நாய்கி, பட்ஜி, பாலுக்குறும்பா, பிராஹுய், பெங்கோ, பேலாரி, மண்டா, மலையாளம், மால்தோ, ஜேனுக்குறும்பா.

இவற்றில் பிராஹுய் மொழி பேசும் பிராஹுய் என அழைக்கப்படும் பழங்குடி மக்கள் பாகிஸ்தானின் பலுச்சிஸ்தான் (Balochistan), சிந்து (Sind) மாகாணங்களிலும்; ஈரான் நாட்டின் ஈரான் பலுச்சிஸ்தான் (Iranian Balochistan) பகுதியில் உள்ள சிஸ்தன் (Sistan), சாஹிதன் (Zahidan) ஆகிய இடங்களிலும், ஆப்கானிஸ்தான் நாட்டின் ஹெல்முண்ட் (Helmund), நிம்ரோஸ் (Nimroz) பகுதிகளிலும் வாழ்கின்றனர் (சபிர் - Sabir, 1995:1)26. இதர மொழிகள் பேசும் மக்கள் அனைவரும் இந்தியாவைத் தாயகமாகக் கொண்டவர்கள்.

திராவிட மொழிகளைப் பேசும் பழங்குடியினரிடம் கள ஆய்வுகள் மூலம் நடத்தப்பட்ட மொழியியல் ஆய்வுகள் மொழிகளை அடையாளங் கண்டதோடு பல கலாச்சார, சமூகக் கருத்துக்களுக்கும் ஆதாரமாக விளங்கின. பொதுவாகப் பழங்குடி மக்கள் பொருளாதாரத்தில் தன்னிறைவு கொண்டவர் களாகவும், பிற சமுதாயங்களை நம்பி வாழ்பவர்கள் அல்லர் என்றும் மானிடவியல் ஆய்வாளர்கள் கருதினர். ஆனால் இக்கருத்து தவறானது எனத் தோடா, கோட்டா, குறும்பா, படகா மொழிகளைப் பேசும் மக்களிடையே கள ஆய்வுகள் பல செய்த முர்ரே பி. எமனோ அவர்கள் நிரூபித்துள்ளார். தமிழகத்தின் நீலகிரி மாவட்டத்தில் வாழும் தோடர்கள், கோத்தர்கள், குறும்பர்கள், படகர்கள் வெவ்வேறு மொழிகளைப் பேசும் பழங்குடியினர்களாக இருப்பினும் பொருளாதாரத்தில் ஒரு பழங்குடியினர் வேறொரு பழங்குடியினரைச் சார்ந்து வாழ்பவர் களாக விளங்குகின்றனர். மேலும் சாதியமைப்பில் வாழும் மக்களிடையே உயர்ந்தோர் தாழ்ந்தோர் எனும் வேற்றுமைகள் இருப்பதுபோல் பழங்குடியினர்களாகிய இவர்களிடமும் இப்பழக்கம் உள்ளது. தோடர்கள், கோத்தர்கள், குறும்பர்கள் ஆகிய பழங்குடி மக்களில் தோடர்கள் மிக உயர்ந்தவர்களாகும். கோத்தர்கள் மிகத் தாழ்ந்தவர்களாகவும் குறும்பர்களும்

பிற்காலத்தில் இங்குக் குடியேறிய படகர்களும் நடுத்தர வர்க்கத்தினர்களாகவும் ஒரு சமுதாயக் கூட்டமைப்பில் வாழ்ந்து வந்துள்ளனர். குறும்பர்கள், கோந்த் போன்ற பழங்குடிகள் ஒரு பொதுப் பெயரில் அழைக்கப்பட்டாலும் மொழியால் பல பிரிவினர் என்ற உண்மையால், சமுதாயப் பெயரால் ஒன்றுபட்டாலும் மொழியால் மாறுபடும் சமுதாய நிலையை அறியமுடிந்தது. மேலும் பண்பாட்டுக் கூறுகளால் ஒன்றாக இருக்கும் பழங்குடியினர் மொழியால் வேறு வேறு சமுதாயங்களாக மாறுபட்டு நிற்பதோடல்லாமல், அம் மொழிகள் வேறு வேறு மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழி களாகவும் இருக்கும் உண்மையும் தெரிய வந்துள்ளது. கோந்த், குறும்பர் போன்ற பழங்குடி மக்கள் மொழிகளால் பிரிக்கப் பட்டாலும், அம் மொழிகள் அனைத்தும் திராவிட மொழிக் குடும்பம் எனும் மொழிக்குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளாகும். ஆனால் கதபா பழங்குடியினரோ இருவேறு மொழிக் குடும்பங்களைச் சேர்ந்த இருவேறு பிரிவினர்களாக உள்ளனர். ஒரு பிரிவினர் கதபா (Gadaba) எனும் திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழியையும் வேறு ஒரு பிரிவினர் குதொப் (Gutob) எனும் முண்டா பிரிவைச் (Munda subgroup) சேர்ந்த ஆஸ்ட்ரோ - ஆசியாடிக் (Austro - Asiatic) மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழியையும் பேசுகின்றனர். திராவிட மொழி ஆய்வுகள் மானிடவியல் ஆய்வுகளுக்கும் தங்களின் பங்களிப்பை நல்கியுள்ளன என்று கூறினால் அது மிகையாகாது.

இதுவரை கேரளாவில் வாழும் பழங்குடிமக்களில் எந்த ஒரு பிரிவினரும் தனி மொழியைப் பேசுவதாக எந்த ஆய்வுகளும் தெரிவிக்கவில்லை (பட்டாச்சார்யா - Bhattacharya, *1976:21*). கேரளப் பல்கலைக்கழகத்தின் மொழியியல் துறை கேரள மாநிலப் பழங்குடிமக்கள் பேசும் மொழிகள் பற்றிய அளவாய்வை (Survey) 1974ஆம் ஆண்டு நடத்தியது. இந்த அளவாய்வில் காணிக்காரர் (Kanikkar), மலை உள்ளாடன் (Mala Ulladan), மலை புலயன் (Mala Pulayan), மலை குறவன் (Mala Kuravan), வேட்டுவர் (Vettuvar), மலை அடியன் (Mala Adiyan), மலை பண்டாரம் (Mala Pandaram) ஆகிய ஏழு பழங்குடிமக்கள் மட்டும் களஆய்வுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டனர். இவர்களில் காணிக்காரர் திருவனந்தபுரம் மாவட்டத்தில் வாழ்பவர்கள். இதரப் பழங்குடியினர் கோழிக்கோடு (Calicut) மாவட்டத்தில் வாழ்பவர்கள் (பட்டாச்சார்யா, *1976: 30*). இப்பழங்குடிகள் பேசும் பேச்சுவழக்குகள் மலையாள மொழியின் கிளைமொழி களாகக் கருதப்படுகின்றன. அனைத்துப் பழங்குடி மக்களும்

மலையாளம் சார்ந்த மொழியாக உள்ள மலையாளக் கிளை மொழிகளைப் பேசினாலும் அவர்களுடைய பேச்சுவழக்கில் அந்தந்தப் பழங்குடியினர்களின் வாழ்வாதாரம், பண்பாட்டுப் பின்னணி, வாழும் இயற்கைச் சூழ்நிலைகள் ஆகியவற்றின் அடிப்படையில் அவர்களின் பேச்சுவழக்கில் வேறுபாடுகள் காணப்படுகின்றன. பேச்சுவழக்கினை ஆதாரமாகக் கொண்டு கேரளப் பழங்குடியினர்களை மலபாரைச் சேர்ந்தவர்கள், கொச்சிப் பகுதியைச் சேர்ந்தவர்கள், திருவனந்தபுரம் பகுதியைச் சேர்ந்தவர்கள் என மூன்று பிரிவுகளாகப் பிரித்துப் பார்க்க முடியும். தமிழ்நாடு, கேரள மாநிலங்களில் வாழும் எரவல்லர் (Eravallar) பழங்குடி மக்கள் பேசும் பேச்சுவழக்கு ஒரு தனி மொழியாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது (வி. ஞான சுந்தரம், 2011). ஆனால் இக்கூற்றை உறுதிசெய்வதற்கு விரிவான ஆய்வு தேவைப்படுகிறது.

தமிழ்நாட்டில் உள்ள பழங்குடி மக்கள் பேசும் பல பேச்சு வழக்குகள் பல மொழியியல் அறிஞர்களால் கள ஆய்வுகள் மூலம் தரவுகள் சேகரிக்கப்பட்டு ஆராயப்பட்டுள்ளன. இவற்றில் கொல்லிமலை மலையாளி (கருணாகரன், 1971), கல்வராயன் மலை மலையாளி (அண்ணாதுரை, 1984), பச்சைமலை மலையாளி (முத்துக்கிருஷ்ணன், 1990), முதுவன் (சக்திவேல், 1978), காணிக்காரன் (அகத்தியலிங்கம், 1976), பழியன் (முரளிதரன், 1985) ஆகிய பழங்குடியினரின் பேச்சுவழக்குகள் அடங்கும். இவர்களின் பேச்சுவழக்குகளில் காணிக்காரன், பனியன் ஆகிய பழங்குடியினரின் பேச்சுவழக்குகள் மலையாள மொழியின் கிளைமொழியாகவும் இதரப் பழங்குடியினரின் பேச்சு வழக்குகள் தமிழின் கிளைமொழிகளாகவும் கருதப்படுகின்றன. ஆனால் இவர்களின் பேச்சுவழக்குகளில் வாழும் இயற்கைச் சூழ்நிலை, பண்பாடு, சமூகப் பழக்கவழக்கங்கள், உணவுப் பழக்கங்கள், நம்பிக்கைகள் ஆகிய மானிடவியல், சமூகவியல் கூறுகளின் தனித்தன்மைகளைக் காணமுடியும். மேலும், நீலகிரி யல்லாது வேறு பகுதிகளில் குறுபர்/குறும்பர் பழங்குடியினர் பேசும் பேச்சுவழக்கு கன்னட மொழியின் கிளைமொழியாகக் கருதப்படுகிறது (சீனிவாச வர்மா, 1978). நீலகிரி மாவட்டத்தில் வாழும் குறும்பா பழங்குடி யினரும் அவர்களின் உட்பிரிவுகளும் பிற பகுதிகளில் ஆடு வளர்த்து வாழும் பழங்குடி மக்களும் வேறு வேறு சமூகத்தினர்கள் ஆவார்கள். பொதுவாகத் தமிழ் நாட்டிற்கும் கேரளாவிற்கும் எல்லையோரப் பகுதிகளாக அமையும் மேற்குத் தொடர்ச்சி மலைப்பகுதிகளில் வாழும் பழங்குடியினர் பேசும் பேச்சுவழக்குகள் தமிழ் அல்லது

மலையாள மொழியின் கிளைமொழிகளாகக் கருதப்படுகின்றன. ஆனால் இவர்களுடைய பேச்சுவழக்குகள் தமிழ் - மலையாளம் ஆகிய மொழிகள் தனித்தனியாகப் பிரிவதற்கு முந்தைய காலக்கட்டங்களில் பேசப்பட்ட மொழியின் தொடர்ச்சிகள் என்பது நூலாசிரியரின் கருத்து. இதுவரை இந்தப் பேச்சுவழக்குகள் பற்றிய ஆழமான ஆய்வு நடத்தப்பட வில்லை.

கர்நாடக மாநிலம் தெற்கு கனரா (South Kanara) மாவட்டத்தில் வாழும் கொரகா (Koraga) பழங்குடியினர்கள் கூடைமுடைந்து வாழ்பவர்கள். இவர்கள் பிற மக்களிடம் துளு மொழியில் பேசுகின்றார்கள். ஆனால் தங்கள் மொழியைப் பற்றிய தகவல்களைப் பிறரிடம் பகிர்ந்து கொள்ள மாட்டார்கள். கொரகா மொழி துளு மொழியிலிருந்து பிரிந்த மொழியாகக் கருதப்படுகிறது. கொரகா மொழியில் பல கிளைமொழிகள் உள்ளன. இவைகளில் உடுப்பிப் பகுதியில் பேசப்படும் ஒண்டி (Onti) எனப்படும் கிளைமொழியும், ஹெப்ரிப் (Hebri) பகுதியில் பேசப்படும் தப்பு (Tappu) எனப்படும் கிளைமொழியும், கூந்தாப்பூர்ப் (Coondapur) பகுதியில் பேசப்படும் முது (Mudu) எனப்படும் கிளைமொழியும் முக்கியமானவை. ஒண்டிக் கிளை மொழி பேசுபவர்கள் கொரகா - துளு மொழிகளைப் பேசும் இருமொழியாளர்களாகவும் (bilinguals), முது கிளைமொழி பேசுபவர்கள் கொரகா - கன்னடம் மொழிகளைப் பேசும் இருமொழியாளர்களாகவும் உள்ளனர் (பட் - Bhat, *1971: 1 - 2*).

கசபா மொழி பேசும் பழங்குடி மக்கள் தமிழகத்தில் நீலகிரி மாவட்டத்தின் கூடலூர் வட்டத்திற்குள்ளடங்கிய மசினிகுடிப் (Masinigudi) பகுதிகளில் வாழ்கின்றனர். இவர்களின் மக்கள்தொகை (population) மிகக்குறைந்த எண்ணிக்கையில் உள்ளதால் இவர்களைப் பற்றிய ஆய்வுகளும் மக்கள்தொகைக் கணக்கெடுப்புத் தகவல்களும் மிகக்குறைந்த அளவிலேயே உள்ளன (சிதம்பரநாத பிள்ளை, *1978:* XI).

தமிழகத்தின் நீலகிரி மாவட்டத்தின் கூடலூர் வட்டத்தில் வாழும் காட்டு நாயக்கர் பழங்குடியினர் ஜேனு நாயக்கர் (Jenunaykar), தேன் குறுமார் (Tenkurumar) ஜேனு குறுவார் (Jenukuruvar), ஜேனு குறுபரு (Jenu Kurubaru), காடு குறுபரு (Katu Kurubaru) எனும் பெயர்களிலும் அழைக்கப்படுகின்றனர். காட்டு நாயக்கரில் ஒரு பிரிவினராகக் கருதப்படும் ஜேனு குறும்பர் தேன் சேகரிக்கின்றனர், குரங்குக் கறியைச் சாப்பிடுகின்றனர். ஆனால், காட்டு நாயக்கர் பிரிவினர் தேன் சேகரிப்பதில் ஈடுபடுவதில்லை. குரங்குக் கறியைச் சாப்பிடுவதில்லை. சோலை

நாயக்கர் எனும் குறும்பர் இனமக்கள் குள்ள நாயக்கர் (Kulla Nayakas) எனவும் அழைக்கப்படுகின்றனர். இவர்களில் மலைப் பகுதிகளில் உள்ள குகைகளில் வாழும் சோலை நாயக்கர் பழங்குடியினரும் குரங்குக் கறியைச் சாப்பிடுகின்றனர். காட்டு நாயக்கர் பழங்குடியினரிடம் உணவுகளை ஏற்றுக் கொள்கின்றனர் (நடனசபாபதி, 1986: 2).

தமிழகத்தில் நீலகிரி மாவட்டத்தில் வாழும் படகர்கள் கர்நாடக மாநிலத்தில் இருந்து குடியேறியவர்கள். எனவே இவர்களுடைய பேச்சுமொழி கன்னட மொழியின் கிளை மொழியாகக் கருதப்பட்டது. ஆனால் இவர்கள் நீலகிரி மாவட்டத்தில் வாழும் பழங்குடியினரின் மத்தியில் நெடுங்காலமாக வாழ்ந்து வருவதால் இவர்களுடைய பேச்சுவழக்கில் நீலகிரிவாழ் பழங்குடியினர் பேசும் மொழிகளின் தாக்கங்களும் தமிழ் மொழியின் தாக்கங்களும் காலப்போக்கில் அதிகரித்து இவர்கள் பேச்சுவழக்கு ஒரு மொழியாகக் கருதும் அளவிற்கு மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன (Pilot - Raichoor, 1997 - Quoted by P. S. Subrahmanyam, 2008:440). எனவே, தற்பொழுது இது ஒரு தனி மொழியாகக் கருதப்படுகிறது.

தமிழகத்தின் நீலகிரி மாவட்டத்திலும் அதைச் சுற்றி யுள்ள கர்நாடகம், கேரளம் ஆகிய மாநிலங்களின் எல்லையோர மாவட்டங்களிலும் கீழ்க்கண்ட 16 பழங்குடிகள் வாழ்கின்றனர் என்று கமில் சுவலபில் (Kamil Zvelebil, 1981: 471) பட்டிய லிட்டுள்ளார்: தோடர், கோத்தர், பாலுக்குறும்பர், ஆலுக் குறும்பர், ஜேனுக்குறும்பர்/காட்டு நாயக்கர், பெட்ட குறும்பர், முள்ளுக்குறும்பர், ஊராளிக்குறும்பர், முதுகர், மேலைநாடு இருளர், வேட்டைக்காடு இருளர், ஊராளி/ஊராளி இருளர், கசபா/கசவா/கசுபா/கசபா இருளர், பனியர், சோலகர், படகர். இப்பதினாறு வகை மக்களில் படகர்கள் இன்றுவரை பழங்குடியினராக அறிவிக்கபடவில்லை. மீதமுள்ள 15 பிரிவு மக்களும் பழங்குடியினர் ஆவர். இப்பதினாறு இன மக்களை மூன்று பெரும் பிரிவுகளாகக் கமில் சுவலபில் பிரிக்கின்றார் (Zvelebil, 1981: 497).

1. தோடர் - கோத்தர் உட்பிரிவு (Toda - Kota subgroup) - தோடர், கோத்தர்.

2. தமிழ் மொழிசார் உட்பிரிவு (Tamiloid group) - மேலைநாடு இருளர், வேட்டைக் காடு இருளர், ஊராளி இருளர், கசபா இருளர், பாலுக்குறும்பர், முதுகர், பனியர்.

3. கன்னட மொழிசார் உட்பிரிவு (Kannadoid group) - ஆலுக்குறும்பர், சோலகர், படகர், ஜேனுக்குறும்பர்/காட்டு நாயக்கர், பெட்ட குறும்பர்.

இம்மூன்று உட்பிரிவுகளைச் சேர்ந்த பழங்குடியினர்களில் தமிழ்சார் உட்பிரிவைச் சார்ந்த இருளர், கசப இருளர் ஆகியவர்களின் மொழிகள் தனித்தனி மொழிகள் என்று ஆராய்ந்து மொழியியல் அறிஞர்களால் கூறப்படுவதால் இவை தமிழிலிருந்து பிரிந்த மொழிகள் என்று எடுத்துக் கொள்ள வேண்டும். மேலும் கன்னட மொழிசார் உட்பிரிவில் ஆலுக் குறும்பர், சோலகர், படகர், ஜேனுக்குறும்பர்/காட்டு நாயக்கர், பெட்ட குறும்பர் ஆகியவர்களின் மொழிகளும் தனித்தனி மொழிகள் என்று மொழியியல் அறிஞர்கள் தங்களது ஆய்வுகளில் கூறியுள்ளதால் இவ் ஐந்து மொழிகளும் கன்னட மொழியிலிருந்து பிரிந்த மொழிகள் என்று எடுத்துக்கொள்ள வேண்டும்.

பெரியாழ்வார் (2006: 7) இருளர் பழங்குடியினர் ஏழுவகையான உட்பிரிவுகளைக் கொண்டவர்கள் என்று தம் ஆய்வுக்கட்டுரையில் குறிப்பிடுகின்றார். அவை மேலைநாடு இருளர், கசபர், வேட்டைக்காடு இருளர், ஊராளி, காடு பூஞாரி/இருளிகர் (Kadu Pujaris/Iruliga), வெல்லியன் (Vellian), வில்லியன் (Villian). மொழியடிப்படையில் இருளர் மொழி பேசும் மக்கள், தமிழ் மொழியின் கிளைமொழி பேசும் மக்கள் என்று இருபிரிவுகளாகப் பிரித்துக் காட்டுகின்றார். மேலைநாடு இருளர், கசபர், வேட்டைக்காடு இருளர், ஊராளி இருளர் ஆகிய நான்கு உட்பிரிவுகளும் இருளர் மொழியைப் பேசு வதாகவும் இதர மூன்று பிரிவினர் காடு பூஞாரி/இருளிகர், வெல்லியன், வில்லியன் ஆகியவர்கள் தமிழ்மொழியின் கிளை மொழியைப் பேசுவதாகவும் பெரியாழ்வார் குறிப்பிட்டுள்ளார்.

கொண்டா (Koṇḍa) அல்லது கூபி (Kūbi) மொழி பேசும் மக்கள் கொண்டதுரை (Koṇḍa Dora), கொண்டகாப்பு (Koṇḍa Kāpu), ஓஜா (Ōja), பாண்டவர் (Pāṇḍava) எனும் பல பெயர்களில் அழைக்கப்படுகின்றனர். இப்பெயர்களில் கொண்டதுரை எனும் பெயரே பெரும்பாலும் பயன்படுத்தப்படுகிறது. கொண்டா என்பது மலை எனும் பொருள்படும். மலைகளின் துரைகள் எனும் பெயரில் பழங்குடியினரல்லாத தெலுங்கு மொழி பேசும் மக்களால் இவர்கள் கொண்டதுரை என்று அழைக்கப் பட்டுள்ளனர். இவர்கள் தங்களின் பூர்வீகப் பெயர் கூபி (Kūbi) என்றே கூறுகின்றனர். கூபி எனும் சொல் கூ - 'மலை' (kū - 'hill') எனும் வேர்ச்சொல்லில் இருந்து மலைவாழ்மக்கள் (கூ - யி = கூயி) எனும் பொருளில் கூபியாக மாறியுள்ளதாகக் கருதப்படு கிறது (கிருஷ்ணமூர்த்தி, 1969: 1 - 3). கொண்டா பழங்குடி மக்கள் வாழும் தென்கிழக்குக் கோடிப்பகுதிகளில் பேசப்படும்

கொண்டா மொழியின் கிளைமொழி கூடி (Gūṛi) என்று அழைக்கப்படுகிறது. ஆந்திர மாநிலம் அரக்குப் பள்ளத்தாக்கில் இவர்கள் பல கிராமங்களில் வாழ்கின்றனர். குழந்தைகள் பிறக்கும் நாள்களின் பெயர்களை மையமாக வைத்துத் தங்கள் குழந்தைகளுக்குப் பெயரிடும் வழக்கம் திராவிட மொழிகள் பேசும் பழங்குடி மக்களில் இவர்களிடையே மட்டும் காணப்படும் ஒரு தனிப்பட்ட பண்பாட்டுக்கூறாகும். இவ்வாறான பண்பாட்டுக்கூறு குஜராத், இராஜஸ்தான் மாநிலங்களில் வாழும் பீல் (Bhil) பழங்குடி மக்களிடையே காணப்படுவது குறிப்பிடத்தக்கது (மனோகரன், 1989). மேலும் பீல் (Bhil) பழங்குடியினர் நாள்களின் பெயர்களை மையமாக வைத்து இடும் பெயர்களும், கொண்டா பழங்குடி மக்கள் நாள்களின் பெயர்களை மையமாக வைத்து இடும் பெயர்களும் ஒப்பிட்டுப் பார்க்கத்தக்கனவாக உள்ளன. கூபி (Kūbi) மொழியில் நாள்களின் பெயர்களும் அவைகளையொட்டி வரும் மக்களின் பெயர்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. (கிருஷ்ண மூர்த்தி, 1969: 15).

| | ஆண் | பெண் |
|---|---|---|
| ஆதிவார (ādivāra)<br>"ஞாயிற்றுக் கிழமை" | - ஆது (Ādu) | ஆத்மா (Ādma) |
| சோமவார (śōmavāra) "திங்கட் கிழமை" | -சோம்ரா (Sōmra) | சோம்ப்ரி/சோம்பரி (Sōmbri/Sōmbari) |
| மங்களவார (maṅgaḷavāra)<br>"செவ்வாய்க் கிழமை" | - மங்களா (Maṅgḷa) | மங்களி (Maṅgḷi) |
| புதவார (budhavāra)<br>"புதன் கிழமை" | - புத்ரா (Budra) | புத்ரி (Budri) |
| லக்சுமிவார (lakshmivāra)<br>"வியாழக் கிழமை" | - லஸ்னா/லசு (Lasnā/Lasu) | லசி புடி (Lasi buḍi) |
| சுக்ரவார (sukravāra)<br>"வெள்ளிக் கிழமை" | - சுக்ரா (Sukrā) | சுக்ரி (Sukri) |
| சனிவார (sanivāra)<br>"சனிக் கிழமை" | - சொன்யா (Sonyā) | சொனிமா (Sonimā) |

நாள்கள் பெயர்கள் அனைத்தும் சமஸ்கிருத மொழிப் பெயர்களாக உள்ளன. இவை தெலுங்கு மொழி மூலமாக இவர்கள் மொழியுள் ஊடுருவி இருக்க வேண்டும்.

எருக்கலா (Yeruka) மக்கள் ஆந்திர மாநிலத்தின் பழங்குடினர். ஆனால் தமிழகத்தில் மிகவும் பிற்படுத்தப்பட்ட மக்கள். ஆந்திர மாநிலம் குண்டூர் (Guntur), நெல்லூர் ஆகிய மாவட்டங்களில் பெரும்பகுதியினர் வாழ்கின்றனர். கூடை முடைந்து வாழும் இவர்களில் பலர் நாடோடிகளாக ஊர் விட்டு ஊர்போய் வாழ்பவர்களாகவும் உள்ளனர். இவர்களில் பெண்கள் குறிசொல்வதையும், பச்சை குத்துவதையும் தொழிலாகக் கொண்டுள்ளனர். இவர்கள் தங்களைக் குர்ரு (Kurru) என்றும் தங்களுடைய மொழியைக் குர்ருவாட்ட (Kurru vatta) என்றும் அழைக்கின்றனர். இவர்களுடைய பேச்சுவழக்கு முன்பு தமிழின் கிளைமொழியாகக் கருதப்பட்டது. தற்போழுது இது ஒரு தனி மொழியாகக் கருதப்படுகிறது. தமிழகத்தில் வாழும் குறவர், கொறவர், கொரச்சா இன மக்களும், கர்நாடகத்தில் வாழும் கொரமா (Korama), கொரகா (Korga) இன மக்களும் இவர்களுக்கு இணையான இனத்தவர்கள்.

ஆந்திரப்பிரதேசம், ஒடிஸா, மத்தியப்பிரதேசம் மாநிலங்களில் பாயும் கோதாவரி ஆற்றின் இரு மருங்கிலும் உள்ள மலைப்பகுதிகளில் கோயாப் பழங்குடியினர் வாழ்கின்றனர். கோண்டி மொழிபேசும் பழங்குடியினர் வாழும் பகுதிகளுக்கு அருகாமையில் வாழும் கோயாப் பழங்குடி மக்கள் பேசும் மொழியும் கோண்டி பழங்குடி மக்கள் பேசும் மொழியும் இரு பழங்குடியினருக்கும் புரியும் விதமாக ஒரே மொழியின் இரு கிளைமொழிகளாக உள்ளன. ஆனால் கோண்டி மொழி பேசும் பழங்குடியினர் வாழும் பகுதிகளிலிருந்து சிறிது தூரத்தில் வாழும் கோயாப் பழங்குடி மக்கள் பேசும் மொழி கோண்டி பேசும் மக்களுக்குப் புரிவதில்லை. அதேபோல் இவர்களுக்கும் கோண்டி மொழி புரிவதில்லை (டெய்லர் - Tyler, *1969: 1)*. கோயாப் பழங்குடி மக்களிடையே கொம்மு கோயா (Gommu Kōyas), குட்ட கோயா (Kuṭṭe Kōyas), லிங்கு அல்லது ராஜ் கோயா (Rāj Kōya) எனும் மூன்று பெரும் பிரிவுகள் உள்ளன. கோயா ஒரு தனி மொழியாகக் கருதப்படுவதற்குப் பல சான்றுகள் உள்ளன (சுப்ரமண்யம் - Subrahmanyam, *2008:431)*[27].

ஒடிஸா மாநிலம் கொராபுத் (Koraput) மாவட்டத்தில் வாழும் கதபாப் (Gadaba) பழங்குடியினர் பேசும் மொழியை ஒல்லாரி (Ollari) என்று சுதிபூஷன் பட்டாச்சார்யா அழைத்துள்ளார். ஆந்திர மாநிலம் ஸ்ரீகாகுளம் (Srikakulam) மாவட்டத்தின் சாலூர் (Salur) வட்டத்தில் வாழும் கதபா பழங்குடியினரைப் போயா என்று சுதிபூஷன் பட்டாச்சார்யா குறிப்பிட்டுள்ளார். ஆனால்

இவர்கள் தங்களைக் கொனேகோர் (Koṇekōr) அல்லது கொண்டேகோர் (Koṇḍekōr) என்று அழைக்கின்றனர். கொண்டா (Koṇḍa) என்றால் மலை என்று பொருள்படும். மேலும், இவர்கள் மிகப்பழைய காலத்தில் முந்த்லி (Mundli) என அழைக்கப்பட்டதாகவும் கூறுகின்றனர் (பாஸ்கரராவ், *1980: 1*).

கூய் (Kui) மொழி பேசும் பழங்குடியினர் தங்களைக் கூய்ங்க (Kuinga) என்று அழைக்கின்றனர். ஆனால் பிற மக்கள் இவர்களைக் கோந்த் (Kondh/Khond) அல்லது கந்த் (Khand/Kandh) என்றே அழைக்கின்றனர். கூய் பழங்குடியினர் வாழும் மலைப் பகுதிகளில் வாழும் டோம் அல்லது பானோ (Domb or Pano) சாதியினர்களும் கூய் பழங்குடி மக்களின் மொழியையும் பண்பாட்டையும் ஏற்றுக்கொண்டு அவர்கள் போலவே வாழ்கின்றனர் என்கின்றார் வின்பீல்டு (Winfield, *1928:* XIII).

கூவி (Kuvi) மொழி பேசும் மக்களும் தங்களைக் கூவிங்கா (Kūviṅga), கூவிங (Kūviṅa), கூவிங் (Kūviṅ) என்று அழைக்கின்றனர். இவர்களும் கோந்த் (Kondh/Kondh) எனும் பொதுப் பெயரிலும் அழைக்கப்படுகின்றனர். கூவி மொழி பேசும் பழங்குடி மக்கள் ஒடிசா மாநிலத்தின் கொராபுத் (Koraput), காலஹண்டி (Kalahandi), கஞ்சம் (Kanjam) ஆகிய மாவட்டங்களிலும், ஒடிஸா - ஆந்திர மாநிலங்களின் எல்லையோரப் பகுதிகளிலும் வாழ்கின்றனர். கூவி (Kuvi) மொழி பேசும் பழங்குடிமக்கள் தங்களைச் சாமந்தா (Sāmanta), ஜதாப்பு (Jātāpu or Jātāpu Dora), கோந்து (Kōndu) என்றும் அழைக்கின்றனர்.

பெங்கோ மொழி ஒடிஸா (Orissa) மாநிலம் கொராபுத் மாவட்டத்தின் நவ்ரங்பூர் (Nowrangpur) உட்பிரிவுப் பகுதிகளிலும் தசமந்தபூர் (Dasamantapur) உட்பிரிவுப் பகுதிகளிலும் காலஹகண்டி (Kalahandi) மாவட்டத்தின் எல்லையோரப் பகுதிகளிலும் வாழ்கின்ற பழங்குடிமக்களால் பேசப்படுகிறது. இவர்கள் ஜானி (Jāni) எனவும் அழைக்கப்படுகின்றனர். பழங்குடியினரல்லாத மக்களால் பர்ஜா (Parja) அல்லது பொர்ஜா (Porja) என்று அழைக்கப்படும் இவர்கள் பழங்குடி மக்களில் ஒரு பிரிவினராகக் கருதப்படுகின்றனர் (பர்ரோ & பட்டாச்சார்யா, *1970:* III).

மால்தோ மொழிபேசும் பழங்குடியினர் மால் பகாடியா (Mal Paharia), சாவ்ரியாப் பகாடியா (Sauria Paharia) எனும் இரு பிரிவினர்களைக் கொண்டவர்கள். இவ் இரு பிரிவினர் பேசும் மால்தோ மொழியிலும் சில வேறுபாடுகள் உள்ளன (மகபத்ரா - Mahapatra, *1973:191*).

ஓரான் பழங்குடியினர் வாழும் மாவட்டங்கள் அடங்கிய பகுதி சோட்டா நாக்பூர் (Chota Nagpur) என்று அழைக்கப்படுகிறது. இவர்கள் தங்களைக் குடுக் (Kurukh) என்றும் அழைக்கின்றனர் (Hahn, *1911:* xi). இவர்களில் நாக்பூரியர் (Nagpurias), கிஸான் (Kisan), டாங்கர் (Dhangar) எனும் மூன்று உட்பிரிவுகள் உள்ளன. இவ் உட்பிரிவுகள் திருமண உறவுமுறைக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவை. ஒரு பிரிவைச் சேர்ந்தவர்கள் வேறு ஒரு பிரிவில் திருமணம் செய்யமாட்டார்கள். எடுத்துக் காட்டாக கிஸான் பிரிவைச் சேர்ந்தவர்கள் நாக்பூரியர், டாங்கர் பிரிவுகளில் திருமணம் செய்து கொள்ள மாட்டார்கள் (கிரிக்நர்டு - Grignard, *1931:1*).

கோண்டி மொழி பேசும் பழங்குடியினரில் பல பிரிவுகள் உள்ளன. இவர்கள் ஆந்திரப்பிரதேசம், மத்தியப்பிரதேசம், மகாராஷ்டிரம், ஒடிசா ஆகிய நான்கு மாநிலங்களில் வாழ்கின்றனர். இவர்கள் திராவிட மொழிகள் பேசும் பழங் குடியின மக்களில் மிக அதிக அளவிலான எண்ணிக்கை யுடையவர்கள். டோர்லா (Dorla), மாடியா (Maria), முடியா (Muria), ராஜ் கோண்ட் (Raj Gond), அபுஜ்மாட் மாடியா (Abujhmar Maria), துர்வா (Dhurwa), பைசன் ஹார்ன் மாடியா (Bison Horn Maria) போன்ற பிரிவுகள் கோண்டிப் பழங்குடியினரின் முக்கியமான பிரிவுகளாகும். கோண்டிப் பழங்குடியினர்கள் தவிர அவர்களின் குடும்பங்களின் வரலாற்றைப் பேணிப் பாதுகாக்கும் சேவையைச் செய்து வாழும் பர்தான் (Pardhan) பழங்குடியினரும் தோட்டி (Thoti) என்றழைக்கப்படும் பழங்குடியினரும் கோண்டி மொழியையே தாய்மொழியாகக் கொண்டுள்ளனர். இவ்வாறாகப் பல பழங்குடி மக்களாலும், அவர்களில் உள்ள பல உட்பிரிவினராலும் மேற்கூறிய நான்கு மாநிலங்களில் வாழும் பழங்குடி மக்களால் பேசப்படும் கோண்டி மொழி கீழ்க்கண்ட 10 கிளைமொழிகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது (உமாமகேஷ்வர ராவ் - Umamaheshwar Rao, *1987: 75*). இந்தப் பத்துவகைக் கிளைமொழிகளும் வடமேற்குக் கோண்டி, தென்கிழக்குக் கோண்டி எனும் இரு பெரும் பிரிவுகளில் அடங்கும். பத்து வகைக் கிளைமொழிகளும் அவை பேசப்படும் வட்டாரங்களும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

1. மேற்குக் கோண்டி (Western Gondi) - செஹோர் (Sehore), ஹோசங்காபாத் (Hoshangabad), பேதுல் (Betul)

2. வடக்குக் கோண்டி (Northern Gondi) - சிந்த்வாடா (Chindwara), சியோனி (Seoni), மாண்ட்லா (Mandla), பாலகாட் (Balaghat)

3. மத்திய கோண்டி (Central Gondi) - அமராவதி (Amravati), நாக்பூர் (Nagpur), சந்தாவின் வட பகுதி (Northern part of Chanda)

4. அதிலாபாத் கோண்டி (Adilabad Gondi) - யோத்மல் (Yeotmal), மேற்கு அதிலாபாத் (Western Adilabad)

5. தெற்குக்கோண்டி (Southern Gondi) - அதிலாபாத் மாவட்டத்தின் கிழக்குப்பகுதி, சந்தா மாவட்டத்தின் தெற்குப் பகுதி (Eastern part of Adilabad and Southern part of Chanda)

6. வடக்குப் பஸ்தார் கோண்டி (North Bastar Gondi) - அபுஜ்மார் பகுதி நீங்கலாக பஸ்தாரின் வடக்குப்பகுதி (Northern part of Bastar except Abujhmar region)

7. ஹில் மாடியா கோண்டி (Hill Maria Gondi) - பஸ்தாரின் அபுஜ்மார் பகுதி (Abujhmar region of Bastar), கர்ச்சிரோலி (Garchchiroli) மாவட்டம்

8. தெற்குப் பஸ்தார் கோண்டி (South Bastar Gondi) - பஸ்தாரின் தெற்குப்பகுதி (Southern part of Bastar).

9. டோர்லி கோண்டி (Dorli Gondi) - போபாலப்பட்டினம் (Bhopalapatnam), கொந்தா (Konta) வட்டங்கள் உள்ளடங்கிய பஸ்தார் மாவட்டத்தின் தென்மேற்குப் பகுதி (Southern part of Bastar comprising Bhopalapatnam and Konta)

10. தென்கிழக்குக் கோண்டி (South Eastern Gondi) - கம்மம் (Khammam), கிழக்குக் கோதாவரி (East Godavari) மாவட்டங்கள், கொராபுத் (Koraput) மாவட்டத்தின் மல்கங்கிரி (Malkangiri) வட்டம்

இன்றளவிலும் பல அறிஞர்கள் திராவிட மொழிகளைப் பேசும் மக்களிடையே கள ஆய்வுகள் செய்து மொழித்தரவுகள் சேகரித்து ஆராய்ந்து ஆதாரப்பூர்வமாகத் திராவிட மொழிகளை நிலைநாட்டியுள்ளனர். அவர்கள் வெளியிட்டுள்ள நூல்கள், கட்டுரைகள், அறிக்கைகள் அடிப்படையில் கீழ்க்கண்ட 41 மொழிகள் திராவிட மொழிகளாகக் கருதப்படுகின்றன: ஆலு குறும்பா/ பாலு குறும்பா (Alu Kurumba/Palu Kurumba), இந்தி/ ஆவே (Indi/Awe), இருளா (Irula), எருக்கலா (Yerukkala), ஒல்லாரி (Ollari), கசபா/கசபா இருளா (Kasaba/Kasaba Irula), கதபா/ கொண்டேகோர் கதபா (Gadaba/Kondekor Gadaba), கன்னடம் (Kannada), காடர் (Kadar), குடுக்/ஒரான் - டாங்கர் குடுக் (Kurukh/ Oraon - Dangar Kurukh), குறும்பா - ஊராளிக்குறும்பா (Kurumba - Urali Kurumba), கூய் (Kui), கூவி (Kuvi), கொடகு/கூர்கி (Kodagu/

Coorgi), கொண்டா/கூபி (Konda/Kubi), கொரகா (Koraga),கோட்டா (Kota), கோண்டி(ஜோரியா கோண்டி, அபுஜ் மாடியா, பைஸன் ஹார்ன் மாடியா, முடியா, மாடியா) (Gondi - Joria Gondi, Abujh Maria, Bison Horn Maria, Muria , Maria), கோந்த்/ கந்த் (Khond/Khand), கோயா/கோய் (Koya/Koi), கோலாமி (Kolami), சோலகா/சோலிகா - ஊராளிச் சோலகா, போடு சோலகா (Sholaga/Soliga - Urali Sholaga, Podu Sholaga), தமிழ் (Tamil), துளு (Tulu), தெலுங்கு (Telugu), தோடா (Toda), நாய்க்டி (Naikri), நாய்கி (Naiki), படகா (Badaga), பட்ஜி (Parji), பிராஹீய் (Brahui), பெங்கோ (Pengo), பெட்ட குறும்பா (Betta Kurumba), பேலாரி (Belari), மண்டா (Manda), மலவேடா (Malaveda), மலையாளம் (Malaiyalam), மால்தோ (Malto), முதுவா/முதுகா (Muduva/ Muduga), முள்ளுக்குறும்பா (Mullu Kurumba), ஜேனுக்குறும்பா/ காட்டு நாயக்கா - சோலை நாயக்கா (Jenu Kurumba/Kattu Nayakka - Colai Naykka).

தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய நான்கு தென்னிந்திய இலக்கிய மொழிகள் தவிரப் பிற மொழிகளை ஆராய்ந்துள்ள மொழியியல் அறிஞர்களின் பெயர்களும் அவர்கள் வெளியிட்ட ஆய்வுநூல்கள், கட்டுரைகள், அறிக்கைகள் ஆகியவைகளின் ஆண்டுகளும் பின்னிணைப்பு 4இல் கொடுக்கப் பட்டுள்ளன. அவைகளின் முழுத் தகவல்கள் மேற்கோள் நூல் பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ளன.

# திராவிட மொழி ஒப்பாய்வுகள்

பல மொழிகளில் காணப்படும் பொதுவான மொழிக் கூறுகள் (ஒலியனியல், உருபனியல்), அவற்றில் காணப்படும் மாற்றங்கள் ஆகியற்றின் அடிப்படையில் ஒரு மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழிகள் பூர்வீகமொழியில் (proto language) இருந்து பிரிந்து உட்பிரிவு மொழிகளாக மாறி யுள்ளதையும் பின்னர் ஓர் உட்பிரிவில் காணப்படும் மொழிகள் பிரிந்து எவ்வாறு தனி மொழிகளாக மாறியுள்ளன என்பதையும் எடுத்துக்காட்டுகளுடன் ஆராய்வதே ஒப்பாய்வாளர்களின் (comparative linguists) நோக்கமாகும். திராவிட மொழிகளின் ஒப்பாய்வுகளில் ஒரு மொழியோடு வேறு சில மொழிகளையோ அல்லது ஒரு வட்டாரத்தில் பேசப்படும் மொழிகளையோ ஒப்பாய்வு செய்வதில் பல அறிஞர்கள் ஈடுபட்டுள்ளனர். ஆனால் ஒட்டுமொத்தமாக எல்லாத் திராவிட மொழிகளின் ஆய்வுகளை அடிப்படையாகக் கொண்டு ஒப்பாய்வு செய்து திராவிட மொழிகளின் உட்பிரிவுகள் (subgroup), உட்பிரிவுகளில் பூர்வீக மொழிகளிலிருந்து எம்மொழிகள் பிரிந்திருக்கக்கூடும் என்பது போன்ற ஆய்வுகளில் தங்களின் பெரும் பங்கை நல்கியவர்கள் பிஎச். கிருஷ்ணமூர்த்தி (Bh. Krishnamurti), பி.எஸ். சுப்ரமண்யம் (P.S. Subrahmanyam), செ.வை. சண்முகம் (S.V. Shanmugam) ஆவர். பிஎச். கிருஷ்ணமூர்த்தி (1961) முதன் முதலில் தம்முடைய முனைவர் பட்ட ஆய்வான தெலுங்கு மொழி வினைகளின் அடிச்சொற்கள் (Telugu Verbal Bases) எனும் ஆய்வின் பின்னிணைப்பாகத் (Appendix) திராவிட மொழிகளைப் பாகுபடுத்தி அவற்றின் உட்பிரிவுகளையும், உட்பிரிவுகளுள் அடங்கும் மொழிகளின் பிரிவுகளையும் ஆராய்ந்ததோடு வரைபடம் மூலமாக எடுத்துக்காட்டியுள்ளார். பின்னர், திராவிட மொழிகள் (Dravidian Languages - 2003) எனும் நூலில் அவருடைய ஆய்வுகள் அனைத்தையும் தொகுத்து வழங்கிப் புதிய கருத்துகளையும் சேர்த்துள்ளார். பி.எஸ். சுப்ரமண்யம் (1963) முதன் முதலில் தம்முடைய முனைவர் பட்ட ஆய்வில் திராவிட மொழிகளின் வினைச்சொற்களையும், வினைச் சொற்களைச் சார்ந்த இலக்கணக் கூறுகளையும் அடிப்படையாக

வைத்து விரிவானதொரு ஆய்வு செய்து திராவிட மொழிகளின் உட்பிரிவுகளையும் உட்பிரிவு களுக்குள் அடங்கும் மொழிகளின் பிரிவுகளையும் ஆதாரப் பூர்வமாக விளக்கியதோடு வரைபடம் மூலம் எடுத்துக் காட்டியும் உள்ளார். இவரது ஆய்வை அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1971இல் நூலாக வெளியிட்டுள்ளது. பின்னர், திராவிட ஒப்பிலக்கணம் I (Dravidian Comparative Study I - 2008) எனும் நூலில் அவருடைய ஆய்வுகள் அனைத்தையும் தொகுத்துப் புதிய கருத்துக்களோடு கொடுத்துள்ளார். இவர்கள் இருவரையும் "திராவிட மொழிகளின் ஒப்பாய்வில் வாழ்நாள் சாதனையாளர்கள்" என்றால் அது மிகையாகாது. செ. வை. சண்முகம் திராவிட மொழிகளின் பெயர்ச்சொற்கள், பெயர்ச் சொற்களைச் சார்ந்த இலக்கணக் கூறுகளின் அடிப்படையில் மேற்கொண்ட ஒப்பாய்வுகளை அண்ணாமலைப் பல்கலைக் கழகம் 1971இல் நூலாக வெளியிட்டுள்ளது.

திராவிட மொழிச் சொற்களை ஒப்பாய்வு செய்து திராவிட மொழிகளின் உயிரெழுத்து (vowel), மெய்யெழுத்து (consonant) ஒலியன்களை (phoneme) முதன் முதலில் 1959இல் எம்.பி.எமனோ எடுத்துக்காட்டுகளுடன் உறுதிசெய்து சொற்களையும் தொகுத்துக் கொடுத்துள்ளார். இந்த ஆய்வை 1970இல் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் நூலாக வெளியிட்டது. இவருடைய எடுத்துக்காட்டுகளை ஆதாரமாக வைத்து கமில் சுவலபில் (Kamil V. Zvelebil) விரிவானதொரு ஆய்வை 1970இல் வெளியிட்டார். திராவிட மொழிச் சொற்களில் விரிவானதொரு ஆய்வு செய்து ஒலி, ஒலியன் மாற்றங்களை விளக்கி இதுவரை வந்துள்ள ஆய்வுகளை மேற்கோள்காட்டி, பி. எஸ். சுப்ரமண்யம் 1983இல் நூலாக வெளியிட்டுள்ளார்.

தாமஸ் பர்ரோவும் எம். பி. எமனோவும் இணைந்து 1961இல் திராவிட மொழிச் சொற்கள் அனைத்தையும் தொகுத்துத் திராவிட மொழிச் சொற்களின் ஒப்பாய்வு அகராதியைச் (Dravidian Etymological Dictionary) சொற்களின் பொருளை மையமாக வைத்துத் தொகுத்தனர். பின்னர் இதில் விடுபட்ட சொற்களை 1968இல் வெளியிட்டனர். அதன் பின்னர் ஒரு கட்டுரை வடிவில் பல புதிய சொற்களை 1972இல் வெளியிட்டனர். இறுதியாக 1984 வரை களஆய்வுகள் மூலம் திராவிட மொழிகள் எனத் தீர்மானிக்கப்பட்ட மொழிகளின் சொற்கள்

அனைத்தையும் பொருள் அடிப்படையில் தொகுத்துத் திருத்தியமைக்கப்பட்ட பதிப்பாக 1984இல் வெளியிட்டனர். இதில் 5,557 சொற்கள் உள்ளன. பின்னிணைப்பில் (Appendix) இந்தோ-ஆரிய மொழிகளிலிருந்து திராவிட மொழிக்குள் கடன்வாங்குதல் (borrowing) மூலம் ஊடுருவிய சொற்களாக 61 சொற்கள் கொடுக்கப்பட்டுள்ளன. கிரியர்சன் (Grierson - 1909) முதன் முதலாகத் திராவிட மொழிக் குடும்பத்தின் மொழிகளின் பிரிவுகளைப் பாகுபடுத்திக்காட்டி மொழிகளின் பிரிவுகள் பற்றிய வரைபடத்தைக் கொடுத்துள்ளார். இவருடைய வரைபடத்தில் 13 திராவிட மொழிகள் இடம்பெற்றுள்ளன. இவற்றை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரித்துக்காட்டியுள்ளார்.

1. திராவிட மொழிகள்: தமிழ், மலையாளம், துளு, கொடகு, தோடா, கோட்டா, கன்னடம், குடுக், மால்தோ ஆகிய 9 மொழிகள்

2.ஆந்திர மொழிகள்: கோலாமி, தெலுங்கு ஆகிய இரண்டு மொழிகள்

3. பிராஹூய்: பிராஹூய் மொழியைத் தனியொரு பிரிவில் வைத்துள்ளார்

மேலும் கோண்டி, கூய் ஆகிய இருமொழிகளையும் திராவிட மொழிப்பிரிவிற்கும் ஆந்திர மொழிப் பிரிவிற்கும் இடைப்பட்ட (Intermediate) மொழிகளாகக் கொடுத்துள்ளார்.

பி.எஸ். சுப்ரமண்யம் (1971, 2008) திராவிட மொழிக் குடும்ப மொழிகளை மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொரு பிரிவிலும் உள்ள உட்பிரிவு மொழிகளை வரைபடம் மூலம் எடுத்துக் காட்டியுள்ளார். அம்மூன்று பிரிவுகளும் உட்பிரிவுகளும் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

**தென்திராவிடம் (South Dravidian):** தமிழ், மலையாளம், கொடகு, கோட்டா, தோடா, கன்னடம், துளு ஆகிய 7 மொழிகள்

**மத்தியதிராவிடம் (Central Dravidian):** தெலுங்கு, கோண்டி, கொண்டா, பெங்கோ, மண்டா, கூய், கூவி, கோலாமி, நாய்கி, பட்ஜி, கதபா ஆகிய 11 மொழிகள்

**வடதிராவிடம் (North Dravidian):** குடுக், மால்தோ, பிராஹூய் ஆகிய 3 மொழிகள்

